உ



# கடவுளும் கோயிலும் சிலகேள்விகள்

அவனருள்

வெளியீடு - 44

ஜூன் 1998

ரூ. 1.50

## தெய்வ அருள் கூட்டுவிக்கும் காலங்கள்

உறங்கும் நேரம் தவிர, ஒவ்வொரு நொடியிலும் கடவுளை நினைந்திட விரும்பினாலும், எல்லோருக்கும் அது இயல்வதில்லை. இதனாலேயே குறிப்பிட்ட மாதம், பக்ஷம், திதி, நக்ஷத்ரம், கிழமை அல்லது நேரத்திலாவது பரம்பொருளை வழிபடும்படி கூறப்படுகிறோம்.

அளவாய்ப் புசிப்பதே ஆரோக்கியத்தின் அடிப்படை என்றாலும் எல்லோராலும் உணவு நெறி முறைகளைக் கடைப்பிடிக்க முடிவதில்லை. அதனால் ஏற்படும் சக்திக்குறைவு, உடற்பிணிகளைப் போக்கிட அவ்வப்போது விருந்தும், மருந்தும் சாப்பிடுவது போலவே நம் பிறவிப்பிணி தீர குறிப்பிட்ட நேரங்களிலாவது கடவுளை மறவாமல் வழிபட்டு அருள்பெறுவோம்.

*முக்கிய காலங்கள் :* அன்றாடம் அதிகாலையும், மாலை நேரமும், மாதப்பிறப்புகள், அமாவாசை, பௌர்ணமி, சதுர்த்தி, சஷ்டி, ஏகாதசி, பிரதோஷங்கள் மற்றும் விரத தினங்கள், பண்டிகை நாட்கள்.

கூடிவணங்கிடக் கோயிலோ, சிந்தனையைக் கூட்டுவிக்க சிலைகளோ, விரிவாக வழிபட வசதியோ இல்லாமலிருக்கலாம். ஆனால் திருநாமங்களைக் கூறிட தடை ஏதும் இருக்க முடியாது. கோயிலும், சிலையும், பொருளும் கால வசத்தால் குலையலாம், மறையலாம். ஆனால் நாம ஜப ஒலி அதிர்வுகள் அழிவதேயில்லை. ஈடில்லா ஒலி–ஒளி வடிவினனை விரிவாக வழிபட முடியாவிட்டாலும் சிந்தனையாலாவது போற்றி உய்வோம்.

உ








# கடவுளும் கோயிலும் சில கேள்விகள்

அவனருள்
வெளியீடு - 44
ஜூன் 1998
அறப்பிரசுர விலை
ரூ. 1.50

## பொருளடக்கம்

# முன்னுரை

மீனாட்சியின் மதுரையில், கிழக்கே, மாரியம்மன் தெப்பக்குளத்தின் மேற்குக் கரையில் உறையும், ஸ்ரீ மரகதவல்லி முக்தீசுவரர் அருளால், 22.6.88 அன்று காஞ்சி மாமுனிவர் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சுவாமிகளைப் பணிந்த போது, அவர் அருளிய பணி ஆயுட்பணியாக வளர்ந்து விட்டது.

சிவாலயங்களைப் பற்றி மட்டும் துவங்கிய ஆய்வு, ஆண்டவனைப் பற்றி, அறிவதையே வாழ்நோக்காக ஆக்கிவிட்டது. கடந்த 9 ஆண்டுகளில், அவனருளாலே, அவனைப் பற்றி கேட்ட, படித்த, சேகரித்த, தொகுத்த, குறிப்பெடுத்த செய்திகளின் பதிவிப்பே *அவனருள் வெளியீடுகள்* ஆகும். தமிழில் அர்ச்சனைத் துதிகள், கோயில் களஞ்சியங்கள், திருத்தல வழிகாட்டிகள், ஆலய வரலாறுகள், வழிபாட்டு முறை விளக்கிகள், திருப்பெயர் தொகுப்புக்கள் போன்று இதுவரை 43 நூல்கள் வெளியாகியுள்ளன.

திருப்பெயர்களையும், திருக்கோயில்களையும், திருத்தலங்களையும், திருவிழாக்களையும், திருமுறைகளையும் பற்றி மென்மேலும் அறிகையில், இவற்றுக்கெல்லாம் பின்னணியிலும், அப்பாற்பட்டும், இருக்கின்ற பரம்பொருளைப் பற்றி அவ்வவ்போது பல கேள்விகள் எழுந்து வந்திருக்கின்றன.

*கேள்விகளே கடவுளைக் காட்ட வல்லன.*

இக்கேள்விகளை கேட்கும் உரிமையை வழங்குவதே சனாதன தர்மத்தின் (இந்து சமயத்தின்) தனிச் சிறப்பாகும்.

கேள்விகள் கணக்கற்றவையாயினும், சில மிக அடிப்படையானவை. அந்த முக்கிய கேள்விகளிலும் மிகச்சில மட்டுமே இந்நூலில் எழுப்பப்பட்டுள்ளன. *இன்னும் பிறவற்றுக்கு, அடுத்தடுத்த நூல்களில் பதில் அளித்து புரிய வைக்க வேண்டுவது அவன் பொறுப்பு* — *அவனருள்,* எஸ். ரமணி

# கேள்வி: நோக்கமும் - முறையும்

## *அறிவுக்கு அடிப்படை கேள்விகளே*

விஞ்ஞானமாயினும் சரி, மெய்ஞானமாயினும் சரி முதலில் கேள்வி கேட்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

தெளிவாகக் கேட்டலே தீர்வுக்கான முதல் படி.

இதனால் தான் இந்துமதம், தன் கூற்றுக்களையும், கோட்பாடுகளையும் பற்றி, கேள்வி கேட்பதற்கும், விமர்சனம் செய்வதற்கும் முழு சுதந்திரம் அளித்து வந்திருக்கிறது.

கேள்விகளை விரிவாகவும், தெளிவாகவும், முழுமையாகவும், தொடர்ந்து விடைகிடைக்கும் வரையும் கேட்க வேண்டும் என்று மட்டுமே விரும்பியிருக்கிறது.

அறிவுப் பெருக்க வரலாற்றில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்னரும், மிகச் சிறிய அணுவைப் பற்றி கூட நம்மால் முழுமையான செய்திகளைப் பெற்றிட இயலாதபோது. எங்கும் நிறைந்த சக்தியைப் பற்றிய கேள்விகளுக்கு மட்டும் ஒரு நொடியில் பதில் எதிர்பார்ப்பது சரியல்ல.

Express coffee (துரித காபி) அல்லது fast food (திடீர் உணவு ) பெறுவது போலவோ அல்லது அடுத்த ஊருக்கு எந்த எண் பஸ் என்று கேட்டவுடன் 4,8 என கூறப்படுவதைப் போலவோ உடனே விடை கிடைக்காவிட்டால்,

கடவுளே இல்லை என்றும்,

விளக்க இயலாதவனை அறிவிலாதவன் என்றும்,

முடிவு கட்டுவதும், பிரச்சாரம் செய்வதும் முறையல்ல.

ஆண்டவனை அறிவதில், ஒரு *விவேகானந்தரைப்* போல, (நாவில் போட்ட சர்க்கரை வெகுநேரம் கரையாத

அளவுக்கு) *நமக்கும் அறிவு வேட்கை இருந்தால்,* நம் ஒவ்வொருவருக்கும், *ஒரு இராமகிருஷ்ண பரமஹம்சர்* வந்து *கண்டிப்பாக கடவுளை அடையாளம் காட்டுவார்.*

இந்துமத வரலாற்றை, சற்று ஊன்றிப் பார்த்தால், வேத காலத்திலிருந்தே, அதன் தத்துவங்களைப் பற்றியும், வாழ்–நெறியைப் பற்றியும், பல சிந்தனையாளர்கள், மிக ஆழமாக ஆய்ந்து ஆயிரக்கணக்கான கேள்விகளை எழுப்பியிருப்பது தெரியும்.

அந்த மூதாதையர்களின் கேள்விகளோடு ஒப்பிடுகையில், இன்று, பகுத்தறிவுவாதிகள் என்றும், சீர்திருத்தவாதிகள் என்றும் நமக்கு நாமே பெருமிதப்பட்டுக் கொள்ளும், நம்முடைய கேள்விகள் பலவும் மிகமிகக் குழந்தைத் தனமாகவும், முதிர்ச்சியற்றதாகவும் தெரிகின்றன.

நாம் பலரும் கேள்வி கேட்பதோடு நின்று விடுகிறோம். அது மட்டுமின்றி, கேள்வி கேட்கும் திறன் வந்துவிட்டதாக நினைத்து, அடக்கமின்மையால், அடுத்தவரிடம் விளக்கம் கேட்பதில்லை. நம் கருத்துக்களைப் பிறருடையதோடு சரி பார்ப்பதுமில்லை. இப்படி, கேள்வியை மட்டும் கேட்டுவிட்டு, விடையறிய பொறுமையில்லாமல் இருப்பதும், நியாயமான விடையை ஏற்காமால் பிடிவாதமாக இருப்பதுமே பழமைவாதமாகும்; மடமையாகும். அடிப்படையற்ற அவசர முடிவுக்கு வருவது தான் மூடத்தனமும், மூர்க்கத்தனமுமாகும்.

இத்தகைய, வெறுமனே *பேசிப் பிழைப்பவர்களுக்கும் விளம்பர–விரும்பிகளுக்கும்* சிந்தனைச் செம்மல் என்றும், சீர்திருத்தவாதி என்றும் பட்டம் கொடுப்பது இன்னும் கேவலம்.

பட்டம் கொடுப்பதும், பெறுவதும் அதனை மதிப்பவர்களுக்கு இடையிலான விஷயம் என்றால் கூட, இப்பட்டங்கள் பொதுமக்களின் கண்களை மறைத்து, அவர்களைச் சிந்திக்க இயலாதவர்களாக, பாமரராகவே இருக்கச் செய்கின்ற அவலத்தைக் கருதும்போது, கடவுளைப் பற்றி கேள்வி எழுப்புபவர்கள், விடையறிய முற்படுபவர்களா அல்லது வெட்டியாகப் பேசி நம் வாழ்வையும் வீணடிக்கும் சுயநலவாதிகளா என்று அறிந்திட வேண்டும்.

இவர்களுடைய வினாக்கள் முதல் பார்வைக்குப் பல சமயங்களில் ஞானியர்கள் எழுப்பிய கேள்விகளைப் போலத் தோன்றினாலும், உண்மையில், இவர்களில் பெரும்பாலோர் *விதண்டாவாதிகளாக்வும், சொல்–எத்தர்களாகவுமே* இருக்கின்றனர். *இத்தகையோர் நம் சிந்தனைக் காவலர்கள் அல்ல. சிந்தனைக் குழப்பிகளே.*

இவர்களுடைய போக்குக்கு மாறாக, மிக மிகச் சிலரே, *அகந்தை அஞ்ஞானத்தை வளர்ப்பதையும், அடக்கமே அறிவை முதிர்விப்பதையும்* உணர்ந்து செயல்பட்டிருக்கின்றனர். இத்தகு கலாச்சாரச் சிற்பிகள், காலம் காலமாக, கேள்வி கேட்டு, விடையும் கண்டு, அதனடிப்படையில் அமைத்துக் கொடுத்த *வாழ்–நெறி முறைகளின்* தொகுப்பே *சனாதன – தர்மம்* என்ற இந்து மதமாகும்.

இக்கலாச்சாரத்தின் அஸ்திவாரமான சில கேள்விகளை (முக்கியமாக, கோயிலைப் பற்றி, கடவுளைப் பற்றி) நினைவுபடுத்தி, அவற்றுக்கு, இன்றையோர் அறிந்த அறிவியல் செய்திகளை உதாரணமாகக் கொண்டு, விடைபகர முயலுவதே இந்நூலின் நோக்கம்.

புற உலகப் பொருட்களை, புறப்புலன்களால், புறத்தாரும் ஆமோதிக்கும் வகையில் செயல்படுகின்ற *விஞ்ஞான ஆய்வுகளின் நோக்கமும்,* அகச்சத்தியினால், ஆழ்ந்த ஒருமை நிலையினால், அனைத்துள்ளும் பரந்த அரிய சக்தியை, அவரவர் உணரும் வகையில் செயல்படுகின்ற *ஆன்மிக ஆய்வுகளின் நோக்கமும், ஒன்றே* – அதாவது *அறியாததை அறிவது.*

இருவகை ஆய்வும் முடிவு பெறாத தொடர் கதையாகவே இருப்பதால் அறிவு – ஏணியில் தொடர்ந்து மேலே செல்ல, முன்னோர் அளித்த செய்தித் தொகுப்புப் படிகளும் தேவை. நம்முடைய கேட்டு – விடையறியும் படிகளும் தேவை.

பெற்றவன் விட்ட சொத்தை பிள்ளை விட்டு விடுவதில்லை. அதிகம் இருப்பினும் திருப்திப்படாமல் மேலும் தேடுகிறான். அது போலவே ஆண்டவனைப் பற்றிய ஆய்விலும் முயலுவோம்.

பணம், பங்களா போன்ற சொத்தாயினும் சரி, பரம் பொருள் பற்றிய கருத்துக்களாயினும் சரி, அவை எப்படி வந்தன, ஏன் வந்தன என்று கேட்பதில் தவறில்லை; அவசியமே.

*நம் கேள்விகளை, பாரபட்சமின்றி, எந்தவித முன்–முடிவுமின்றி, பதவி, பணம், பலம் போன்றவற்றுக்குப் பயப்படாமல், வயப்படாமல் பதில் கிடைக்கும் வரை கேட்டுக் கொண்டே இருப்போம்.*

## கடவுள் என்ற சக்தியை ஏற்பதா?

குருடனுக்குக் கண்பார்வை இல்லை என்பதாலோ அல்லது பார்வை உள்ளவனுக்கே இருட்டிலும், இரவிலும் பிற பொருட்கள் தெரியவில்லை என்பதாலோ சூரியனும், சந்திரனும் நட்சத்திரங்களும் இல்லாமல் போவதில்லை.

மனிதன் தோன்றி, மொழி தோன்றி, சூரியன் என்ற சொல் தோன்றுவதற்கு முன்பே சூரியனும் பிற கோள்களும் இருந்து வந்திருக்கின்றன. இது போன்றதே கடவுள் எனப்பெறும் சக்தியின் நிலையும்.

நாம் ஏற்பதால், ஏற்காததால் அதற்கு உயர்வோ தாழ்வோயில்லை; நம்மால் *ஏற்றுக் கொள்ளப்பட்டாலும், ஏற்றுக் கொள்ளப்படாவிட்டாலும், உள்ளது இல்லாமல் போவதில்லை.*

எல்லாவகைத் தேவைகளையும் கடந்துவிட்ட *பிணத்துக்கும்,* ஐம்புலன்களை வென்று, வெட்ட வெளியில் கட்டையாகக் கிடக்கும் *சன்னியாசிக்கும்,* தன் நிலையை உணர இயலாத *பைத்தியத்துக்கும்,* சாப்பிடச் சோறு தேவையில்லை; உடுக்க ஆடை தேவையில்லை; எங்குமுள்ள சக்தியை பெயர் வைத்து கூப்பிடத் தேவையில்லை. அதனை வணங்க கோயிலோ, பூசையோ தேவையில்லை.

நாம் பித்தனாக, முற்றும் துறந்த சன்னியாசியாக அல்லது பிணமாக ஆகும் வரை, (அதாவது) சோறு, உடை, வீடு என்று பல தேவைகளை நாடும் வரைக்கும் நமக்கெல்லாம் அப்பாற்பட்டுள்ள சக்தியை ஏற்பது தான் முறை. பிறருக்காக அல்லது பதவிக்காக பரம்பொருளை மறுப்பது பச்சோந்தித்தனமேயாகும்.

## கடவுளை நினைவது அவசியமா?

உலகில் உள்ள கோடானு – கோடி பொருட்களை, மனிதன் அப்படியே ஏற்கவும், துய்க்கவும் முடியுமானால் அதாவது, *இது வேண்டும், அது வேண்டாம் என்று கூறாமல் இருக்க முடியுமானால்* –

நாம் பொருட்களைச் சேமிக்க வேண்டியதில்லை. அவற்றை வைக்கப் பெட்டி, பாத்திரம் தேவையில்லை. அதனைச் சமைக்கத் தேவையில்லை. பக்குவம் செய்ய அடுப்பும் தேவையில்லை. வஸ்துக்களை (பொருட்களை) விரும்பி, சேகரித்து அல்லது தயாரித்து, சேமித்து, பாதுகாக்க வேண்டாதவரை வீடும் தேவையில்லை. அதில் நிறைவாக வாழும் பொருட்டு மனைகட்டும் முறையை விளக்கும் வாஸ்து சாஸ்திரமும் தேவையில்லை.

மனித இனம் *நாடோடிவாழ் – முறையை* (nomadic life) விடுத்து *நிலைவாழ் – முறையை* (settled life) மேற்கொண்ட பின்தான் பொங்கிய சோறும், நெய்த ஆடையும், பரம்பொருள் சக்தியை நினைவதும் அவசியமாயிற்று. அதனைக் குறிப்பிட ஒரு பெயரும் தேவையாயிற்று. அச்சக்தியை வழிபட இடங்களும் தேவையாயின. அதனின்று பயன் பெற்றுவிக்கும் அமைப்பான ஆசாரங்களும், சாத்திரங்களும் (கோட்பாடுகளும்) தேவையாயின.

ஆண்டவனை ஏற்று நினைந்து போற்றுவதாலும் ஏற்க மறுத்துப் பொய்மைகளைப் பகர்வதாலும் *லாப– நஷ்டம் நமக்கே. உய்வதும் – உழல்வதும் நாமே.* அப்பரம்பொருள் சக்திக்கு குறைவு – நிறைவோ, சிறுமை – பெருமையோ ஏற்படுவதில்லை.

## கடவுளுக்குப் பல பெயர்கள் ஏன்?

இறைவனின் பெயரால், அவரின் குறிப்பிட்ட பெயரை மட்டுமே சிலர் ஏற்கும் போக்கினால், மனித சமுதாயம் காலம் காலமாக சண்டையிட்டு வந்திருக்கின்ற சூழ்நிலையில் கடவுள் பெயர் தொடர்பாக பல கேள்விகள் எழுகின்றன. அவற்றுள் சில

மிக முக்கியமானவை.

1) கடவுளுக்கு பல பெயர்கள் எப்படி வந்தன?

2) எந்தப் பெயர் சரியானது?

3) ஒரு பெயரால் அழைப்பவரே அறிவாளிகளா?

4) இறைவனுக்கு ஒரு பெயரை மட்டுமே உடைய சமயங்களிலும் ஏன் உள்–மதச் சண்டைகள் வருகின்றன?

பிறக்கின்ற ஒவ்வொரு குழந்தையும் அழும்போது "ம்மா" என்று ஒரே சத்தமே வந்தாலும், இக்குரலைக் கேட்டதும், பெற்ற குழந்தையைக் கவனித்துக் கொள்ளும் பெண்ணை (அதாவது தாயை)க் குறிப்பதில்கூட மனித இனம் ஒரே பெயரைக் கையாளவில்லை

*அம்மா* என்றும், *ஆத்தா* என்றும், *மதர்* என்றும், *ஆயா* என்றும், *அம்பா* என்றும் இன்னும் பல சொற்களையும் நாம் பயன்படுத்துகிறோம்.

ஒரு உயிரைப் பிறப்புவிக்கும் பெண்ணைக் குறிக்கவே நூற்றுக்கணக்கான வார்த்தைகள் இருக்கும் போது, எல்லாவற்றுக்கும் பின்னணியான சக்திக்கு ஆயிரக்கணக்கான சொற்கள் தோன்றியிருப்பதில் வியப்பேயில்லை.

ஒவ்வொருவருமே நம் பெற்றோரை முதலில் அம்மா, அப்பா என்று தான் அறிகிறோம்; கூப்பிடுகிறோம். காலப்போக்கில் தான், அவர்களைப் பல்லோரும், காமாக்ஷி என்றும், கிருஷ்ணன் என்றும், அண்ணா என்றும், அத்தை என்றும், பாடகி என்றும், பாவேந்தர் என்றும், இன்னும் பல்வேறு அடிப்படைகளின்படி பல்வேறு பெயர்களால் அழைப்பதை அறிகிறோம்.

இப்படி ஒரே மனிதரையே, நாம் அவரவர் அறிந்து

கொண்ட அளவில், பலநூறு பெயர்களால் குறிப்பிடும்போது அளப்பரிய, அகண்டாகார சக்தியை லக்ஷக்கணக்கான பெயர்களால் போற்றி வருவதும் இயற்கையான செயலே.

கண்பார்வையில்லாத சிலர் யானையைத் தொட்டதும் வெவ்வேறு இடத்தில் தொட்டு உணர்ந்தபடியும், அவரவர்க்கு, ஏற்கனவே இருந்த அனுபவங்களின் அடிப்படையிலும், காலைத் தொட்டவன் *மரம்* என்றும், காதைத் தொட்டவன் *முறம்* என்றும், துதிக்கையைத் தொட்டவன் *தொடை* என்றும் பலவாறாக விவரிப்பது போலவேதான், நம்மில் சிலர், அரசனால் ஆளப்பட்டு வந்திருக்கின்ற அனுபவத்தின் அடிப்படையில் பரம்பொருளை *ஆண்டவன்* என்றும், மற்றும் சிலர் அச்சக்தி கடந்தும், உள்ளும் இருக்கின்றதை வைத்து அதனைக் *கடவுள்* என்றும், இன்னும் பலர் வேறு பிற பெயர்களிட்டும் அழைக்கின்றனர்; வெவ்வேறாகவும் விவரிக்கின்றனர்.

மனித இனம் தோன்றிய காலந்தொட்டு
மறையக் கூடிய காலம் வரை
வாழ்ந்த, வாழ்கின்ற, வாழக்கூடிய மக்கள்

எத்தனை கோடி – கோடியோ, அத்தனை கோடிகோடிப் பெயர்கள் கடவுளுக்குத் தோன்றினாலும் அது நியாயமே; முட்டாள் தனமல்ல. எல்லாப் பெயர்களும் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டியவைகளே.

இங்கு ஆச்சரியப்பட வேண்டிய நிலை என்ன வென்றால், கோடானுகோடி மனிதர் வாழ்ந்திருப்பினும் கடவுளுக்கான அனைத்துப் பெயர்களையும் சேர்த்தால் கூட அது லட்சத்தைக் கூட தாண்டாதிருப்பதே. கடவுளின் பெயர்கள், கணக்கிட முடியாமல் பெருகாமைக்கான ஒரு முக்கிய

காரணத்தை இங்கு அறிந்திடல் வேண்டும்.

மனிதரின் பேச்சு-உபகரணம் (வயிறு, மார்பு, குரல்வளை, வாய், மூக்கு) குறிப்பிட்ட சில ஒலிகளையே, ஒலிக்கோர்வைகளையே (sound sequences) உச்சரிக்க இயலும். மீனும் – மானும், புலியும் – பூனையும், பறவையும் – பாம்பும், மற்றும் பிற உயிரினங்கள் எழுப்புகின்ற ஒலிகளை மனிதனால் தொடர்ந்து எழுப்ப இயலாது. அதாவது *மனிதனால் உச்சரிக்கக்கூடிய அளவிலேயே மொழிகளில் வார்த்தைகள் உருவாக முடியும்.* இதனால் தான், மனித இனம் பலகோடி பொருட்களைக் கண்டிருப்பினும ஒவ்வொன்றுக்கும் தனிப்பெயர் வைக்காமல் சில லட்சம் வார்த்தைகளைக் கொண்டே அனைத்தையும் குறிப்பிடுகின்றது.

இதுபோலவே தான் தொன்று தொட்டு வாழ்ந்து வந்திருக்கின்ற அருளாளர்களின் இறை அனுபவங்கள் எண்ணிலா வகைத்தாயினும் சில ஆயிரம் பெயர்கள் மட்டுமே கடவுளுக்கு உருவாகியிருக்கின்றன.

இந்நிலையில், ஏதோ ஒரு மொழியில், ஆங்கிலத்தில், தமிழில், ஹிந்தியில், ஒரியாவில்....... உருவான ஒரு பெயரையே எல்லா மொழி பேசுவோரும் ஏற்றுக் கொள்ள வேண்டுமென விரும்புவதும், அப்பெயர் வழங்கும் மதத்தவராக மாற வேண்டுமென பிறரைக் கட்டாயப்படுத்துவதும் முறையல்ல. *எல்லாப் பெயர்களையும் ஏற்க வேண்டும்; மதிக்க வேண்டும்.*

இவ்வுண்மை நிலையை, அறிவுபூர்வமான நிலையைக் கருதியதால் தான் இந்துக்கள், கடவுளுக்கு உருவாகி வந்திருக்கின்ற அனைத்துப் பெயர்களையும் போற்றி வந்திருக்கின்றனர். பிறநாட்டு மொழிகளில் உருவான

பெயர்களைத் தவறாகக் கருதவில்லை; புறக்கணிக்கவில்லை; தம் மொழியிலுள்ள சிவன், ராமன், மாரியம்மன் போன்ற பெயர்களையே பிறரும் பயன்படுத்த வேண்டும் என பலாத்காரம் செய்யவுமில்லை.

மனிதர்க்கு பேச்சு இருக்கும் வரை, அதற்குப் பல மொழிகள் உள்ள வரை, நம்மால் முற்றுமாக விளக்க இயலாத சக்திக்கும் *பல்லாயிரம் பெயர்கள் கண்டிப்பாக அவசியமே.*

சண்டையும் – சாவும் இப்பெயர்களால் வருவன அல்ல. சிலர், சில அமைப்பினர், சில நூல்கள், தாம் போற்றும் பெயரையே மற்றெல்லோரும் ஏற்க வேண்டும் என *திணிக்கும் பணியிலும், பிறரைத் தூற்றும் பணியிலும் இறங்கும் போது தான் பல் – மத, உள் – மதக் கலவரங்கள் தோன்றுகின்றன.*

பிறர் கண்டதிலும், கூறுவதிலும், அறிவுடைமை இருக்கும் என்று மதிக்கும் பண்பு பெருகிவிட்டால், கடவுள் இன்னும் பல லட்சம் பெயர்களால் அழைக்கப்பட்டாலும், பரம்பொருள் பெயரால் போர்கள் கண்டிப்பாக வாரா.

## இன்ன கடவுளை வணங்கினால்தான் முக்தி கிடைக்குமா?

பெரிய யானையை சிறு பூச்சிவலைக்குள்ளும், பரந்த காற்று மண்டலத்தை சிறு காஸ் சிலிண்டருக்குள்ளும் அடைக்க முடியாது. இது போலவே, எல்லாவற்றைம் கடந்தும், அனைத்துப் பொருட்களின் உள்ளும் இருக்கின்ற இறையை ஒரே ஒரு பெயருக்குள் அல்லது வடிவுக்குள் அடைத்திட இயலாது.

இதனாலேயே இந்து மதம், இறைவனை யார், யார் எந்தப் பெயரில் அழைத்தாலும் எந்த எந்த வகையில்

வணங்கினாலும் எல்லோருமே காப்பாற்றப்படுவதாகவும், முக்தியடைவதாகவும் கருதுகிறது.

குறிப்பிட்ட பெயரால் கும்பிடாதவர்கள் கடுநரகம் செல்வார்கள் என்றோ, அழிக்கப்பட வேண்டியவர்கள் என்றோ இன்னும் பலவகையில் கெட்டவர்கள், கீழ்மையானவர்கள் என்றோ கருதவில்லை. மாறாக, நாத்திகனைக் கூட கடைசியில் கடவுளை அடைகிறான் என்றே கூறுகிறது.

மேலும், ஒரு மதம் பெரிதா, இன்னொன்று பெரிதா என்று வாதிக்க விரும்பாததால், தன் கோட்பாடுகளை பிறர் மீது திணிக்கவும் விரும்பவில்லை. அதாவது, மதம் மாற்றிட விரும்பவில்லை.

இங்கு ஒரு சந்தேகம் எழலாம்.

இந்து மதம் பல்பெயர்–கோட்பாடுகளை ஏற்பதாயின், சில இந்து ஆலயங்களில் இந்து மதத்தினர்க்கே அனுமதி என்ற அறிவிப்பு ஏன்? முதற்பார்வைக்கு, இது குறுகிய மனப்பான்மையாகத் தோன்றினாலும், சற்று ஊன்றிக் கருதினால், இந்து மதத்தின் பரந்த மனப்பான்மைக்கு இதைவிட சிறந்த உதாரணம் இருக்கமுடியாது என்பது விளங்கும்.

பல பிற சமய / இலக்கியங்கள் தத்தம் மதத்தில் பிறந்தவர்க்கு, மிகத் தீவிரமான வரையறைகளைக் கொடுத்துள்ளன. உதாரணமாக,

1) அவர்கள், கடவுளைத் தான் போற்றும் பெயராலேயே வணங்க வேண்டும்.

2) பிற இறைப் பெயர்களை, உருவங்களை புறம்பானதாகக் கருத வேண்டும்.

3) பிற சமய தெய்வ வழிபாட்டுத் தலங்களுக்குச்

செல்லல் முறையல்ல. இப்படிப் பல.

இந்நிலையில், இத்தகு சமயத்தில் பிறந்தவர்கள் பிற மத வழிபாட்டு இடங்களுக்குச் சென்று விட்டால் அவர்கள் தத்தம் மதத்தைப் பின்பற்றாதவர்களாகி விடக்கூடும்.

இந்துக்களால், இந்து சமயக் கருத்துகளால், இந்து வாழ் – நெறியால் கவரப்படுகின்ற பல மதத்தவரும் அவரவர் சமயத்தவரால் மாறுபட்டவராகக் கருதப்படக்கூடாதே என்ற அச்சத்தினால் தான், நல்ல எண்ணத்தினால் தான், இந்து ஆலயங்களில் குறிப்பிட்ட எல்லைக்கு அப்பால் இந்துக்கள் மட்டுமே நுழையலாம் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

## கடவுள் பல உருவில் அவதரிப்பது ஏன்?

இந்துமதம், யாவற்றுக்கும் அப்பாற்பட்ட சக்தியை ஒன்றாகவே கருதினாலும், இந்து இறை இலக்கியங்கள் கடவுளை பல உருவங்களில் அவதரிப்பதாக விவரிப்பது ஏன்?

உதாரணமாக,

மிகச்சிறு வாமனனாக வரும் விஷ்ணுவே அர்ச்சுனன் முன் விசுவரூபனாகத் தோன்றியது ஏன்? ஆறறிவுக்கும் அப்பாற்பட்ட கடவுள் சிற்றறிவுடைய மீனாக, பன்றியாக மாறியது ஏன்? அமைதியே உருவான சிவபெருமான் பயங்கர வடிவுடைய ருத்ரனாக உரு ஏற்றது ஏன்?

இப்படி முரண்பாடுகள் தோன்றும் போதெல்லாம் அவதாரம் பற்றிய கேள்விகள் அதிகரித்துக் கொண்டே வந்திருக்கின்றன. ஒவ்வொரு வினாவின் விடைக்கும் பண்டை நிகழ்வுகளை(புராணங்களை) ஆராய்வதைவிட அவதாரத்தின் அடிப்படையை அறிந்தால், சந்தேகங்கள் எளிதில் தீர்ந்திடும்

*"அவதாரம்" என்றால் "இறங்கி வரல்"*

தெய்வ அவதாரங்கள் நமக்குப் புரிந்திட, முதலில் நம் வாழ்க்கையில் நிகழும் சில அன்றாட அவதாரங்களைப் பார்ப்போம்.

1) நாம் பெற்ற குழந்தையே ஆயினும், அக்குழந்தைக்கும் நாம் தான் பெற்றவர் என்று தெரிந்தாலும் நாமோ அல்லது குழந்தையோ, எப்போதும் ஒரே வகையில் உடை உடுத்தியோ, செயல்புரிந்தோ மற்றவரைத் திருப்திப்படுத்துவதில்லை. மற்றவரால் திருப்திப்படுவதுமில்லை.

பூனையாகக் கத்தியும், நாயாகக் குரைத்தும், குதிரை போலத் தாவியும், யானை போலத் தவழ்ந்தும், புலி–சிங்கம் போல, வேடம் தரித்தும் இன்னும் பல்வகையிலும், அவசியத்துக்கேற்றபடி பல்நூறு வடிவங்களையும், குணங்களையும் கொண்டவர் போல. நாம் மாறி மாறிச் செயல்படுகிறோம்.

2) ஒவ்வொரு வீட்டிலும், உணவின் அடிப்படைப் பொருட்கள் (அரிசி, பால், சர்க்கரை, உப்பு, காய்கனி போன்றவை) ஒன்றே ஆயினும், தாய்மார்கள், அவற்றை சமைக்கையில் வீட்டில் உள்ள ஒவ்வொரு உறுப்பினரின் விருப்பு, ருசி, உடல்நிலைக்கேற்ப பல்வேறு வகையான உணவுகளாக, திண்பண்டங்களாகத் தயாரிப்பதும் நாம் அறிந்ததே.

3) பாடம் பயிற்றுவிக்கும் ஆசிரியர்கள், வகுப்பில் உள்ள மாணவர்களின் வயதுக்கேற்ப, மனநிலைக்கேற்ப, புத்திகூர்மைக்கேற்ப, தம் நிலையிலிருந்து இறங்கி, ஒவ்வொரு மாணவனும் தன்னால் கவரப்பட்டு, ஆசையோடு கற்றிடும் வகையில், பாடத்திட்டத்தையும், தன் போதனா முறைகளையும் மாற்றி மாற்றி செயல்படுவதும் நம் எல்லோர் மனதிலும்

பசுமையாக இருக்கும்

இது போன்ற நிலைகளையே ஆண்டவனின் அவதாரங்களிலும் காண்கிறோம்

ஆணாக, பெண்ணாக, மனிதனாக, மிருகமாக, உயிராக, ஜடமாக, ஆண்–பெண்ணாக (அர்த்தநாரீஸ்வராக) மனித – மிருகமாக (நரசிம்மர்), உறுப்பிலாத முட்டை முதல் எண்ணிலாக் கை கால் கண்ணுடைய வடிவனாக....... என்று அநேக வடிவங்களில் பரம்பொருள் அவதரிப்பது நமக்காகவே.

நாம் அப்பரம்பொருளோடு தொடர்புடையவர் என்பதை நினைவுறுத்துவதோடு மட்டுமின்றி, அதுவும் நாமும் ஒன்றே என்ற உயர்நிலையை உணர்த்துவதற்காகவே ஆண்டவன் அடிக்கடி இறங்கி வருகிறான். நம் தன்மைக்கேற்ப அறிதிறனுக்கேற்ப, நிலைக்கேற்ப, தேவைக்கேற்ப அடிக்கடி அவதரித்துக் கொண்டேயிருக்கிறான்.

## இறை வழிபாடு தேவையா?

ஆடோ, மாடோ, பூனையோ செயற்கை வெளிச்ச சாதனங்களைத் தேடுவதில்லை. இயற்கையில் உள்ள வெளிச்சமே அவற்றிற்குப் போதுமானதாக உள்ளது. மனிதனுக்குக் கூட அஃது நெடுங்காலம் போதுமானதாகவே இருந்திருக்கிறது.

ஆனால், நாளாவட்டத்தில், நாம், நம்முடைய உள்ளார்ந்த திறன்களை(சக்திகளை)ச் சிறிது, சிறிதாக இழந்தும், மறந்தும், வெளிப்படாதவாறு தடுத்தும் விட்டதால் நமக்குச் செயற்கையான ஒளியை நாடும் அவசியம் ஏற்பட்டுவிட்டது.

இவ்வெளிச்ச நாட்டத்தின், வெப்ப நாட்டத்தின் விளைவே அன்று அரணிக் கட்டையிலிருந்து நெருப்பு உண்டாக்கியதும் இன்று அணு உலை மூலம் மின்சாரம் பெறுவதும் ஆகும்.

புறப்பொருள் பற்றிய அறிவுப் பெருக்க வரலாற்றை ஆராய்ந்தால் மனித சமுதாயம், ஒவ்வொரு துறையிலுமே, எவ்வகையில் செயல்பட்டால், மிகக்குறுகிய காலத்தில், மிகச் சிக்கனமாக, மிகப் பாதுகாப்பாக, மிக எளிமையாக, மிகப் பரந்த அளவில், மிக அதிகப் பயனடைய முடியும் என்று முயன்றிருப்பது தெரியும்.

உதாரணமாக மின்விளக்கை எடுத்துக் கொள்வோம். முதலில், வெப்பத்தை ஏற்று ஒளிரக் கூடிய பொருட்களில் உலோகமே சிறந்தது எனத் தீர்மானித்து, அதிலும்,குறிப்பிட்ட உலோக இழையைத் தெரிவு செய்து, அதையும், ஒரு காற்றில்லா கண்ணாடிக் குடுவையில் பொருத்தி, அதோடு ஒரு பிரதிபலிப்பானையும், (reflector) இணைத்து, அதனையும் நமக்கு வேண்டிய இடத்தில் ஒளியைப் பாய்ச்சக்கூடிய கை விளக்காக (torch) உருவாக்கியிருக்கிறோம்.

இதே போன்ற விரிவாக்கமும், முன்னேற்றமும் இறையியலிலும் ஏற்பட்டிருப்பதைக் காணலாம்.

உதாரணமாக தெய்வத் திருவுருவத்தை வடிப்பதற்கு மனிதன், முதலில் மண்ணையும், அடுத்து, கரைந்து அழியாத மரத்தையும், பின்னர், கரையானும் அரிக்க முடியாத கல்லையும்,அதற்கும் பின்னர், உடையாத உலோகத்தையும் பயன்படுத்தி வந்திருப்பது தெரியும்.

விழுந்து கும்பிடுவது முதல் விரிவான திருவிழா வரை

எல்லா வழிபாடுகளுமே, வெவ்வேறு பகுதிகளிலும் நிலவுகின்ற தட்பவெப்ப சூழலுக்கேற்ப, இயற்கை ஆதாரங்களுக்கு ஏற்ப, சமுதாயத் தேவைக்கேற்ப, அறிவு நுணுக்க வளர்ச்சிக்கேற்ப உருவான செயல்பாடுகளே.

புற உலகப் பொருட்களை மனிதன் பயன்படுத்தி வந்திருக்கின்ற வரலாற்றில், எப்படி, அன்று கல்லை உபயோகிக்கும் அறிவைப் பெற்றது முதல், இன்று அணுசக்தியை உபயோகிக்கும் முறை அறிந்திருப்பதுவரை, யாவுமே நன்மை அளிப்பதாக உள்ளனவோ, அது போலவே அனைத்து, இறை வழிபாட்டு முறைகளும் மனிதருக்கு பேருதவி புரியும் ஊன்றுகோல்களாகவே உள்ளன.

இவ்வரலாற்றை அறிய முற்படாதிருப்பதும், ஏற்க மறுப்பதும், அல்லது பல்வகை வழிபாட்டு முறைகளையும், அவற்றை வழங்கிய முன்னோர்களையும் அவமதிப்பதும் முறையல்ல.

நம்மால் *மூடப்பழக்கம்* என்று கண்டிக்கப் பெறும் பெரும்பாலான செயல்பாடுகளும் உண்மையில் கருத்துக்கள் மறக்கப்பட்ட, *மூடப்பட்ட வழக்கங்களே.* பல்வேறு சமயங்களிலும் இத்தகு பழக்கங்கள் உருவாகியிருப்பினும், பலரும் இந்து மதத்தை மட்டும், அதன் கருத்துகளை, அமைப்புகளை, நெறிமுறைகளை மட்டும் இழிவாகப் பேசுவது மிகவும் வருந்தத்தக்கது.

இதில் வேடிக்கை என்னவென்றால் உருவ வழிபாடு தேவையா? கடவுள் கல்லில் இருக்கிறானா? கோயில் எதற்கு? என்று பேசுபவர்கள் தான் தாங்கள் தலைவர்களாகக் கருதுகின்றவர்களுக்கு தெருதோறும் சிலை வைத்து,

வீடுதோறும் படங்கள் மாட்டி, உடலிலும், மோதிரத்திலும், மாலையிலும், முத்திரை பதித்துக் கொண்டு, மாதக்கணக்கில் பிறந்த நாள், இறந்த நாள் விழா எடுக்கின்றனர். தாமும் அறிவு-முதிர்ச்சி பெறாமல், பல்லோர் மனத்தையும் புண்படுத்துகின்றனர்.

ஒவ்வொருவரும் காலையில் எழுந்து பல் துலக்குவது முதல், மறுநாள் காலை துயிலெழும் வரை, அன்றாட வாழ்வில் நூற்றுக்கணக்கான, லட்சக்கணக்கான பிற பொருட்களையும், மனிதரையும், உயிர்களையும், அமைப்புகளையும் சார்ந்திருக்கும் நிலையைக் கடந்துவிட முடியுமானால், அதாவது *எப்பொருளுமே தேவையில்லை என்று இருந்திட முடியுமானால். அத்தகைய வருக்கு இறை வழிபாடு தேவையில்லை.* அவர்கள் எல்லா வழிபாட்டு முறைகளையும் மறந்து விடலாம்.

*அவ்வுயரிய நிலையை உண்மையாகவே அடையும் வரை,* எளிய முறையில் நம்மை இறைவனிடம் வழிநடத்திச் செல்லுதற்காகவே உருவாகியுள்ள *எல்லா வழிபாடுகளுமே நமக்கு அவசியம் தேவையே.*

## பல்வகை வழிபாடுகள் ஏன்?

நொண்டி நடையாத்திரை மேற்கொள்வது கடினம். குருடன் கோபுர தரிசனம் செய்ய இயலாது. ஊமை பாடிப் பணிய முடியாது. நீரை நீந்திக் கடப்பது போலவே நெருப்பைக் கடக்க முடியாது. சுற்றித்தான் செல்ல வேண்டும். அதாவது, எல்லோரும், எல்லா நிலைகளிலும், எப்போதும், ஒரே வகையில் செயல்பட முடியாது.

இது இறைவழிபாட்டிற்கும் பொருந்தும்
வழிபடுவோரின் வசதிக்கேற்ப, தொழிலுக்கேற்ப,

எண்ணிக்கைக்கு ஏற்ப, குணத்துக்கு ஏற்ப், உடல்நிலைக்கேற்ப, கால அவகாசத்துக்கு ஏற்ப, சூழலுக்கு ஏற்ப இன்னும் பல நூறு நிலைகளுக்கு ஏற்பவும், உருவான எல்லாவகை வழிபாட்டு முறைகளுமே ஒரே சக்தியை வணங்கிப் பயனடைவதற்காகவே. இதனால்தான் இந்து மதம் பிற நாடுகளில், பிற மதங்களில் தோன்றிய வழிபாட்டு முறைகளையும் ஏற்றுக் கொள்கிறது. எவ்வகை வழிபாட்டையும் தாழ்வாகக் கருதவில்லை, தடுக்கவில்லை.

மனதால் செய்யும் திருநாம ஜபம் முதல், பலரறிய செய்யப்படும் பூஜைகள், யாகங்கள் வரை, அங்கம் உருண்டு கொடுப்பது முதல், அக்னியில் நடப்பது வரை, வாய் திறவாத நோன்பு முதல் வாயாரப் பாடுவது வரை, உட்கார்ந்து ஒதுவது முதல் ஊர்சுற்றித் திருவுலா நடத்துவது வரை இப்படி எல்லா வகை வழிபாடுகளுக்குமே இறையருளைக் கூட்டுவிக்கும் திறனிருப்பதாகக் கருதுகிறது.

மேலும் எல்லோராலும் எல்லா வகை வழிபாடு களையும் நடத்திட இயலாது என்பதற்காகத்தான் ஆண்டி செய்யும் ஐந்து பைசா தானத்துக்கு, அரசன் செய்யும் அசுவமேத யாக பலன் கிடைப்பதாகக் கூறுகிறது. சிறுவரும், வயோதிகரும், நோயாளியும், அடிக்கடி உண்ணா நோன்பிருக்க இயலாது என்பதால் அவர்கள் வருடமொரு முறை வைகுண்ட ஏதாதசியிலோ, சிவராத்திரியிலோ ஒருநாள் விரதமிருந்தால் கூட வருடமுழுவதும் நோன்பிருந்த பலனைப் பெறுவதாகத் தெரிவிக்கின்றது.

எல்லாவற்றிலும் உள்ளார்ந்திருக்கும் பரம்பொருளை, *எதையும் ஏற்கும் இறைவனை இந்து மதம் குறிப்பிட்ட பெயரால்,*

*வடிவால், நூலால், நாளில், நேரத்தில் தான் கும்பிட வேண்டும் என்று எவரையும் கட்டுப்படுத்தவில்லை.*

எல்லாவகை வழிபாடுகளையும், ஏற்கப்பட வேண்டியவைகளாக, மேற்கொள்ளப்பட வேண்டியவைகளாகவே கருதுகிறது.

சிறு பூச்சி முதல் பூதாகார வடிவுடைய உயிரினங்களிலும், சிற்றணு முதல் சிந்தனைக்கெட்டாத பொருட்களிலும் ஊடுருவியுள்ள சக்தியைப் பணிந்து, அறிந்து, உணர்தற்கு எத்தனை வழிபாட்டு முறைகள் இருந்தாலும் தவறில்லை.

நடப்பில் உள்ள வழிபாடுகள் எல்லாவற்றையும் சேர்த்தாலும் கூட போதாமை இருப்பதாக உணர்வதால்தான், இந்து மதம், மென்மேலும் பலவழிகளில் அவனை அடைய முயல்வதை தடுக்கவில்லை. ஆதரித்தே வந்திருக்கிறது.

உருவ வழிபாட்டின் அடிப்படை தோற்றம், வளர்ச்சி ஆகியவற்றைப் பற்றி விரிவாக அறிய, அவனருள் வெளியீடு–8 *"உருவ வழிபாடும் ஆலயங்களும்"* என்ற நூலைக் காண்க.

## கடவுளை பல்-உருவில் பல்-பொருளில் வடிவித்து வழிபடுவதேன்?

விளக்கிலிருந்து பரவும் *ஒளி–அளவு* ஒன்றேயாயினும், அவ்வொளி நமக்குத் தேவையான இடத்திற்கும், நம் கண்ணுக்குத் தெரிகின்ற அளவுக்கு மட்டும் பரவும் வகையிலும், நாம் விளக்கில் பயன்படுத்தப்படும் பொருட்களை – எரிபொருள், எரிதிரி போன்றவற்றை மாற்றிக் கொள்வதை எல்லோரும் அறிவோம்.

1) *விளக்குகளை* உருவாக்குவதற்கு கண்ணாடி, கல், உலோகம் போன்ற பல பொருட்களை உபயோகிக்கிறோம்.

2) *எரிபொருளாக,* பச்சைத் தாவர எண்ணெய்கள் முதல் நிலத்தடி மண்ணெண்ணை போன்றவற்றையும், மேலும் எரிவாயு, மின்சாரம் ஆகியவற்றையும் பயன்படுத்துகிறோம்.

3) *எரிபொருளை ஏற்று வெளிச்சம் தருவதற்காக* பஞ்சுத்திரி முதல் மிக நுண்ணிய உலோக இழைகள் வரை உபயோகிக்கிறோம்.

4) உருவாகின்ற ஒளியை விரும்பும் இடத்திற்கு கிடைக்கச் செய்ய, கண்ணாடி போன்ற பொருட்களை பல வடிவங்களில் பிரதிபலிப்பான்களாக (reflector) தயாரித்துப் பயன்படுத்துகிறோம்.

5) எண்ணெய், எரிவாயு, மின்சக்தி போன்ற சக்தி ஆதாரங்களை தேவையான பகுதிக்கு எடுத்துச் செல்லும்போது ஏற்படும் இழப்பை (transfer loss)க் குறைப்பதற்காக மென் மேலும் புதிய ஒளி அமைப்புகளை உருவாக்கிக் கொண்டே இருக்கின்றோம்.

இதுபோன்ற நிலையைத்தான் இறை வடிவங்களிலும் காண்கிறோம். கடவுளுக்குப் பல்லாயிரம் உருவங்கள் கொடுக்கப்பட்டிருப்பதும், அவை பல்வேறு பொருட்களில் வடிக்கப்பட்ருப்பதும், அவ்வடிவங்கள் வெவ்வேறு வகை அமைப்பிலான, ஆலயங்களில், பல விதக் கோட்பாடுகளின்படி வணங்கப்பட்டு வருவதும், மனித இனத்தின் *பொருளாண்மை திறத்தின்* (materials management) அடிப்படையில் தோன்றிய செயல்பாடுகளே.

கரையான் உருவாக்கும் புற்றும், எலிகள் அமைக்கும்

*கொண்ட அமைப்பே.*

மனித வரலாற்றை நோக்கும்போது, உணவு முதல் உறைவிடம் வரை, அத்தியாவசிய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதில் மனிதன் தன் இயற்கை இயல்பை, திறன்களை எந்த அளவுக்கு, எந்த வேகத்தில் இழந்து வந்திருக்கிறானோ அதே அளவுக்கு, அதே வேகத்தில் செயற்கையான அமைப்புகள் பெருகி வந்திருப்பது தெரியும்.

இயற்கையாய் உருவாகும் அருவிகளிலும், அவை சேர்ந்து பெருகும் ஆறுகளிலும், அவற்றிலிருந்து பிரியும் ஓடைகளிலும், தாழ்வான பகுதியில் தங்குகின்ற தேக்கங்களிலும் கிடைக்கின்ற நீரை ஆங்காங்கே சென்று பயன்படுத்துவது குறையக் குறைய, கிணறுகள் வெட்டுவதும், குளங்கள் அகழ்வதும், கண்மாய்கள் அமைப்பதும், தொட்டிகள் கட்டுவதும், குழாய்கள் பொருத்துவதும் தேவையாகிப் பெருகிவிட்டன.

இது போலவே இறையியலிலும் ஆத்ம வழிபாடு ஆலய வழிபாடாகி, பின்பு ஊருக்கு ஒரு கோயில் என்ற நிலை போய், தெருவுக்கென்று, இனத்துக்கென்று, வீட்டுக்கென்று, ஆலை, அலுவலகங்களுக்கென்று லட்சக்கணக்கான கோயில்களும், பிற வழிபாட்டு இடங்களும் உருவாகிக் கொண்டேயிருக்கின்றன.

தேவையே கண்டுபிடிப்பின் ஆதாரம் (necessity is the mother of invention) என்பது மெய்ஞானத் தேவையைப் பூர்த்தி செய்யும் கோயில் என்ற அமைப்பிலும் உண்மையே.

மனிதனுக்குக் குடிசையும், குடியிருப்புகளும், கோட்டையும் தோன்றிய பின்னரே அவன் வணங்கும் கடவுளுக்கு வழிபாட்டிடங்கள் எழும்பியிருப்பதை இங்கே மறந்திடக் கூடாது. இதனால் தான், சில ஆயிரம் ஆண்டுகட்கு

முன்பு வரை, கடவுளை வணங்கச் சிலையோ, கோயிலோ இருந்ததாகத் தெரியவில்லை.

இதிகாச, புராண காலங்களில், மக்கள், அகிலம் பரவிய சக்தியை அகத்தால் ஆய்ந்திருப்பினும், வாக்கால் போற்றியிருப்பினும், வேள்விகளால் வழிபட்டிருப்பினும், கடவுளைக் கல்லிலோ, கோயில் என்ற கட்டிடத்திலோ வணங்கியதாக நமக்குச் சான்றுகள் கிடைக்கவில்லை.

கோயில்கள் யாவும், கூடிவாழும் மனித இனம், தன் நலம் பெருகுதற்காக எழுப்பிக் கொண்ட சமுதாய நலக் கூடங்களே.

## கடவுளைக் கும்பிட பூசாரி தேவையா?

சைக்கிளை, ஸ்கூட்டரை நாமே ஓட்டிச் செல்கிறோம். காரைக் கூட அநேகமாக அவரவரே ஓட்டுகிறோம். மிகவும் அவசியமானால் தான் வேறு ஒருவரை ஓட்டுநராக (driver) அமர்த்திக் கொள்கிறோம். ஆனால் பெரிய வாகனமாக (lorry, bus) இருப்பின் கண்டிப்பாக ஓட்டுனர் பணிக்கு எனத் தனியாக ஒருவரை நியமிக்கிறோம்.

இதுபோன்ற நிலையைத்தான் இறைவழிபாட்டிலும் காண்கிறோம்.

வீடுகளில் இறைவன் படத்துக்கு முன் தனித்தனியே வணங்கும்போது கடவுளுக்கும், நமக்கும் இடையே எவரும் இருப்பதில்லை. தேவையுமில்லை. அதே வீட்டிலேயே எல்லோருமாகக் கும்பிடும் போது ஒவ்வொருவரும் ஒரு சூடத்தட்டை ஏந்தி வழிபடுவதைவிட யாராவது ஒருவர் பூஜை செய்வதே எல்லோர்க்கும் வசதியாக உள்ளது. இத்தகு

வசதிக்காகத்தான் பல்லோர் கூடும் ஆலயங்களிலும் வழிபாட்டை நடத்தி வைப்பதற்காக பூசாரிகள் அமர்த்தப்படுகின்றனர்.

ஆலயங்களில், நமக்காக, ஆண்டவன் சன்னதியில் வழிபாடு நடத்தி வைக்கும் பூசாரிகளைப் பற்றி அண்மைக் காலத்தில் பலர் பொய்யான செய்திகளைப் பரப்பி வந்திருப்பதை இங்கே வருத்தத்துடன் குறிப்பிட வேண்டியுள்ளது.

அடித்துச் சொன்னால், அல்லது ஆயிரம் தடவை சொன்னால் பொய்யும் மெய்யாகும் என்பது போல, அதிகாரத்திலிருந்த பல அமைப்புகள், பூசாரிகளைப் பற்றி, உண்மைக்குப் புறம்பாகக் கூறிய செய்திகளைப் பொது மக்கள் நம்பும் நிலையும் ஏற்பட்டுவிட்டது. ஆனால் உண்மை நிலையோ முற்றும் மாறுபட்டுள்ளது. உதாரணத்துக்கு ஒரு மாநிலத்தைப் பார்ப்போம்.

தமிழகத்தில் உள்ள லட்சக்கணக்கான, சிறிய பெரிய கோயில்களின் வழிபாட்டு முறை அமைப்பை ஆயும்போது கீழ்க்கண்ட செய்திகளே உண்மையாகத் தெரிகின்றன.

1) பெரும்பான்மைக் கோயில்களில் பூசாரி இருக்கும் அமைப்பே இல்லை. உதாரணமாக, கண்மாய்க் கரைகளில், ஆற்றோரத்தில், சாலை ஓரங்களில் உள்ள கோயில்களிலும், அடியவர்கள் பலர் ஒரே சமயத்தில் கூடாத ஆலயங்களிலும், ஒவ்வொரு ஆலயத்துக்கென்று தனியாக ஒரு பூசாரி இருப்பதில்லை. அக்கோயில்களில் வழிபடும் மக்களும் பூசாரி தேவையாக இருப்பதாகக் கருதுவதுமில்லை.

2) பல்லாயிரம் கோயில்களில், பூசாரி ஒரு *பகுதி நேர ஊழியரே.* அன்றாடம், ஏதாவது ஒரு நேரத்தில் வந்து இறைத்திருவுருவுக்கு நீராட்டி, உடைமாற்றி, பூ சாற்றி, சூடம்

காண்பித்தவுடன் சென்று விடுவார். அந்த சில நிமிடங்கள் தவிர, பிற நேரமெல்லாம் பக்தர்களே அவரவர்க்குத் தெரிந்த வகையில் வழிபடுவதே வழக்கமாயுள்ளது.

3) பல ஆலயங்களில் பூசாரியே எல்லாப் பணியும் செய்யும் நிலை. வழிபாடு நடத்துவிப்பவராக மட்டுமல்லாமல் அவரே துப்புரவாளராக, பாதுகாவலராக,........all in one ஆக ஈடுபட்டிருக்கிறார்.

4) சில ஆயிரம் ஆலயங்களில் மட்டுமே பூசாரி பூசை நடத்தி வைப்பவராக மட்டும் இருக்கிறார்.

5) மிகமிகச் சில, பெரும் ஆலயங்களில், இப்பூசாரி, பூசையில் ஏதாவது ஒரு பகுதியை மட்டும் (அதாவது அபிஷேகம், அலங்காரம், ஆராதனை, உத்ஸவம்)...செயல்படுத்துபவராக இருக்கிறார்.

6) நிரந்தரப் பூசாரிகள் உடைய பெரிய கோயில்களில் கூட, பலவற்றில், பெருகி வரும் பக்தர்களுக்கு ஈடாக தேவையான எண்ணிக்கையில் வழிபாடு நடத்தி வைப்பவர்கள் இல்லை. இதனால் அக்கோயில்களிலும் பல சன்னதிகளில் பக்தர்கள் அவரவரே மாலை சாற்றி, பத்தி காட்டி, சூடம் ஏற்றி, தேங்காய் உடைத்து வழிபடும் நிலையே உள்ளது.

7) எல்லாச் சன்னதிகளிலும் எல்லா நேரத்திலும் எல்லா பக்தர்களுக்கும் பூசாரியே வழிபாடு நடத்தி வைக்கும் கோயில்கள், அலசிப் பார்த்தாலும் அரிதே.

உண்மை இப்படியிருக்க, இந்து மதக் கோயில்களில் மட்டும், கடவுளுக்கும் கும்பிடுபவனுக்குமிடையே பூசாரி தடங்கலாயிருப்பதாகக் கூறுவது *இந்து சமயத்தை மட்டும் கீழ்மைப்படுத்த முயலும் காழ்ப்புப் பிரச்சாரமே.*

அரசு ஆலை, அலுவலகம், ஆஸ்பத்திரி என்று பல்வேறு துறைகளிலும், பல நூறு அமைப்புகளிலும், பணிகள் பெருகுகையில், ஒவ்வொருவர்க்கு ஒரு குறிப்பிட்ட பணியை ஒதுக்கிடுகின்ற *பணிப்பகிர்வு முறை* இருக்கும் வரையும்,

சமுதாயத்தில், அனைவரின் நலன் கருதி, தனி மனிதனின் செயல்பாட்டுச் சுதந்திரம் ஒரு வரையறைக்கு உட்படுத்தப்படும் முறை இருக்கும் வரையும்,

கோயில் என்ற அமைப்பிலும், மக்களின் வழிபாட்டுத் தேவைகளைப் பூர்த்தி செய்ய பூசாரி–முறை தேவையே.

## குறிப்பிட்ட இனத்தவரே பூசாரியாக வேண்டுமா?

ஆலயத்தில் இன்ன இனத்தவர் தான் பூசாரியாக முடியுமா? அவ்வினத்திலும் பூசாரிப் பரம்பரையினரே தான் பூசை செய்ய வேண்டுமா? ஆலயப் பூசாரியாகப் பணி செய்ய *வழிபாட்டு–இயல் பட்டம்* மட்டும் போதாதா?

இது போன்ற பூசாரி தொடர்பான கேள்விகளுக்கு விடை காணும் முன்பு, இவற்றுக்குப் பின்னணியான *ஜாதி–அடிப்படை எண்ணங்கள், வெறும் தன் இனப்பற்றாக மட்டும் இல்லாமல், அண்மைக் காலத்தில், பிற – இன வெறுப்பாக எப்படி மாறியது* என்று நோக்க வேண்டும்.

*பகுப்பது மனித இயற்கை. பகுப்பின்றி அறிவு இல்லை.* (இப்பகுப்பு, பண்பைக் குலைப்பதாக இருக்கக்கூடாது என்பது தான் முக்கியம்). நம்மால் காணப்பட்டவற்றை *உயிருள்ளவை, உயிரற்றவை* என்றும் உயிருள்ளதிலேயே *ஆறறிவுடைய மனிதர், குறை–அறிவுடைய பிறவி என்றும்,* சிற்றறிவுடையவற்றுள்ளேயே *நடப்பன, பறப்பன, ஊர்வன*

என்றும், நடப்பனவற்றுள்ளும் *மாடு, மான்* என்றும், மாடுகளுள் *பசு, எருமை* என்றும், பசுக்களிலும் *நாட்டுப்பசு, சீமைப்பசு* என்றும் இப்படி பல்லாயிரம் வகைகளாகப் பிரித்து அறிகிறோம்.

இதுபோலவே தான் சமுதாயத்திலும் எண்ணிக்கை பெருகப் பெருக மக்களை *இந்தியன்–எகிப்தியன்* என்றும், இந்தியருக்குள்ளேயே *தமிழன் – தெலுங்கன்* என்றும், அத்தமிழருள்ளும் *தஞ்சாவூரான் – திருச்சிக்காரன்* என்றும், தஞ்சாவூராரிலும் *விவசாயி – வழக்கறிஞர்* என்றும், அவ்விவசாயிகளுக்குள்ளும், *அறுவடையாள், நடவாள், மூட்டைதூக்கி* என்றும், அந்தச் சுமை தூக்கிகளிலும் *கம்யூனிஸ்ட்காரன், காங்கிரஸ்காரன்* என்றும், அந்த கம்யூனிஸ்ட்களிலும் CPI, CPI (M) என்றும், இப்படி பலநூறு அடிப்படைகளின்படி, ஆயிரக்கணக்கான குழுக்களாகப் பிரித்து வந்திருக்கிறோம். *எல்லா நாடுகளிலும், எல்லா காலத்திலும், எல்லா மதத்திலும், எல்லா சமூகத்திலும் இத்தகு பாகுபாடு இருந்து வந்திருக்கிறது.*

*பிரிவுகள் இல்லாத துறையே கிடையாது.* ஒவ்வொரு துறையிலும், அதன் விரிவாக்கத்துக்கேற்ப, நுணுக்கத் தன்மைக்கேற்ப, தொன்மைக்கேற்ப ஈடுபட்டுள்ளோர் எண்ணிக்கைக்கேற்ப பாகுபாடுகள் பெருகிக் கொண்டேயிருக்கும்.

உதாரணமாகச் சில நூற்றாண்டுகளுக்கு முன்வரை ஒன்றாயிருந்த ஞானம் (philosophy) பின்னர், மெய்ஞ்ஞானம் (spiritual philosophy), விஞ்ஞானம் (natural philosophy) என இரண்டாகப் பிரிந்து, அதற்கும் பின்னர், அண்மைக் காலத்தில், விஞ்ஞானம் மட்டுமே, ஆயிரக்கணக்கான துறைகளாசப் பிரிந்தது எல்லோரும் அறிந்த விஷயம்.

இப்படிப் பிரிந்த துறைகளிலும், சமுதாயத்திலும் ஒவ்வோர் பிரிவைச் சார்ந்தவர்களும் பெரும்பாலும் ஒரே பகுதியிலேயே (LIC, Bank, Railway, Defence....... காலனிகளில்) வாழ விரும்புவதும், அவர்களுக்குள்ளேயே உறவுமுறைத் திருமண சம்பந்தம் ஏற்படுத்திக் கொள்வதும், தத்தம் குழுவினரையே மேன்மையாகக் கருதுவதும், தம் பணியினாலேயே உலகமே உய்வதாகவும், கிணற்றுத் தவளை போல அல்லது குட்டிப் பூனைபோல தம் கண்ணை மூடினால் உலகமே அஸ்தமித்துவிடும் என்று நினைப்பதும் மனித இயற்கை. இதைத் தான் பழமொழியாக "இனம் இனத்தோடு சேரும்" என்றனர்.

காலம் செல்லச் செல்ல இக்குழுக்களின், பிரிவுகளின் எண்ணிக்கை கூடிக் கொண்டேயிருக்குமே தவிர என்றுமே குறையாது. விலைவாசிகள் குறைந்ததாக வரலாறு இல்லாதது போல, மனிதனின் பகுப்புப் போக்கினால் விளையும் குழுக்களின் எண்ணிக்கையும் குறைந்ததாக வரலாறு இல்லை.

உலக சமுதாயங்களின் வரலாற்றில், இந்திய கலாச்சாரமே மிகப் பழமையானதாக மட்டுமின்றி, தொடர்ந்தும் வந்திருக்கின்ற காரணத்தினால் மற்றவர்களை விட இந்து சமயத்தாரே மிக அதிக எண்ணிக்கையில் பகுக்கப்பட்டிருப்பதில் வியப்பொன்றுமில்லை.

இந்து சமயத்தார் ஆயிரக்கணக்கான ஜாதிகளாய் இருந்தாலும், பல்லாயிரம் வருடங்களாக பெரும்பாலும் ஒற்றுமை யாகவே வாழ்ந்து வந்திருப்பதே உலகோர் யாவரும் வியக்கின்ற செய்தி.

நான்கைந்து பேர் உள்ள *சிறிய குடும்பச்* சூழலிலேயே பூசல்கள் இருக்கும்போது, ஆயிரக்கணக்கான ஜாதிகளைக்

கொண்ட (இந்து சமயத்தார் என்ற) *மாபெரும் குடும்பத்தில்* அவ்வப்போது சண்டைகள் வந்திருப்பதை இங்கு மறுக்கவில்லை. கண்டிப்பாக இருந்திருக்கும்.

பல்லாயிரமாண்டு தொடர் வரலாற்றில், பொருள் ஆசையாலும் பொறுமையின்மையாலும், இந்துக்களிடையே, கருத்து வேறுபாடு மட்டுமின்றி, கடும் போர்களும் நிகழ்ந்திருக்கின்றன. சில நேரங்களில் ஆங்காங்கே சில பிரிவினரின் வழிபாட்டிடங்கள் சூறையாடப்பட்டிருக்கலாம்; குலைக்கப்பட்டிருக்கலாம். இருந்தாலும் கூட, சில நூற்றாண்டு களுக்கு முன்வரை இந்து ஜாதிகளிடையே, இந்திய பூமியிலே இனவெறுப்பும், பிறரை வேரோடு ஒழிக்கும் போக்கும் தலை தூக்கவில்லை.

நடந்த போர்களால், பூசல்களால் ஓரிரு பிரிவுகட்கே ஆபத்தும், பெருத்த அழிவும் நேர்ந்திருக்கிறது. பெரும்பான்மை யான பிரிவுகளும் தொடர்ந்து ஒற்றுமையாகவே வாழ்ந்து வந்திருக்கின்றன.

இந்த சகஜ சூழல், இந்த நூற்றாண்டில் திடீரென மாறத் துவங்கி, இன்று ஒருவர் மற்றவரின் கழுத்தை நெறிக்கும் அளவுக்கு கொடூரமாகி விட்டதுதான் மிகவும் வருந்தத்தக்க, ஆபத்தான நிலை. உடன் ஆராயப்பட்டு தீர்வு காணப்பட வேண்டிய அவசரப் பிரச்சனை.

உலகின் பல்வேறு சமுதாயங்களின், நாடுகளின் வரலாற்றைப் பார்க்கையில், *மக்கள் பல்லாயிரம் பிரிவுகளாக இல்லாமல், மிகச் சில குழுக்களாக இருக்கும்போதுதான் நாட்டுக்கும் மக்களுக்கும் பேராபத்தும் பேரழிவும்* ஏற்பட்டிருப்பது தெரியும்.

இதைத்தான் *"குடிகள் இரண்டானால் கூத்தாடிக்கு கொண்டாட்டம்"* என்றும் *"ஊர் இரண்டானால் ஊரே நாசம்"* என்றும் கூறியிருக்கின்றனர்.

புராண காலத்திய *தேவ – அசுரப்* பிரிவினால் விளைந்த யுத்தங்களும், இதிகாச காலத்திய *கௌரவ – பாண்டவ* அணிகளினால் ஏற்பட்ட பாரதப்போருமே இதற்கு நல்ல சான்று. எல்லா சிற்றரசர்களும் துர்யோதனனோடு அல்லது தர்மனோடு அணி சேராமலிருந்தால் சர்வநாசம் ஏற்பட்டிருக்காது.

அண்மைக்கால இந்திய வரலாற்றில், குறுநில மன்னர்கள், ஐரோப்பிய வியாபார அமைப்புகளின் போட்டியில் இரண்டு குழுக்களாகப் பிரிந்திருக்காவிட்டால் ஒண்ட வந்த வியாபாரி ஊரைப் பிடுங்கியிருக்கமாட்டான். ஒதுங்க வந்த ஒட்டகம் உள்ளவனை விரட்டியிருக்காது. இந்தியா அடிமைப்பட்டிருக்காது.

சுதந்திரமாக இருந்தவரையே இரண்டாக்கி நாடு பற்றியவர்கள், அடிமைப்பட்டவர்களை பல்வகையிலும் கீழ்மைப்படுத்தியதில் வியப்பில்லை. தம் ஆட்சி நிலைப்பதற்காக ஆங்கிலேய அரசு இந்தியரை, இந்துக்கள் என்றும், முஸ்லீம்கள் என்றும், ஆரியர்கள் என்றும், திராவிடர்கள் என்றும் இன்னும் ஒவ்வொரு நிலையிலும் இரண்டுபடுத்தியதின் விளைவை இன்னும் அனுபவிக்கிறோம்.

சில பெரும் குழுக்களாக பிரிக்கப்படுவதால் சமுதாயத்துக்கு நேரும் ஆபத்தையும், அழிவையும், சுதந்திரம் பெற்று 50 ஆண்டுகள் கழிந்த பின்னரும் கூட பொதுமக்களும், அரசியல் கட்சிகளும் உணராமல் இருப்பது மிகவும் துரதிர்ஷ்டமானது.

இந்தியாவுக்கு ஆபத்து ஆயிரம் ஜாதிகளால் அல்ல. எந்த நாட்டு மதத்துக்குமே ஆபத்து அவை பல நூறு பிரிவுகளாக இருக்கும் போது அல்ல. இந்த நூற்றுக்கணக்கான பிரிவுகள் எல்லாம் ஒரு சில குழுக்களாக அணிவகுக்கும் போது தான் ஊருக்கும், நாட்டுக்கும், மதத்துக்கும், மக்களுக்கும், அகில உலகத்துக்குமே அழிவு நேரிடுகிறது. அண்மை உலகப்போர்கள் இரண்டும், நாடுகள் இரண்டு அணிகளாகத் திரண்டதினால் தான்.

உருப்படியான சங்கை ஊதிக்கெடுத்தானாம் என்பது போல, அரசாள விரும்பும் கட்சிகள், அமைப்புகள் யாவுமே, பல்லாயிரம் பிரிவு கொண்ட கோடிக்கணக்கான இந்துக்களை (மேல்குடியினர்,. பிற்பட்டோர், மிகவும் பிற்பட்டோர், தாழ்த்தப்பட்டோர், வரையறுக்கப்பட்ட மரபினர் என்று) மிகச்சில குழுக்களாக தொகுப்புவித்ததால் தான், எல்லா குழுக்களுமே, ஒவ்வொரு தேர்தலிலும், ஒவ்வொரு நிலையிலும், துஷ்பிரச்சாரத்துக்கு உள்ளாகி, துஷ்பிரயோகப்படுத்தப்பட்டு, தீங்கிழைக்கப்பட்டு வருகின்றன.



இந்த விஷம் அரசாட்சி முதல் அலுவலகம் வரை, இல்லங்கள் முதல் இறைவன் வழிபாட்டிடம் வரை அனைத்து இடங்களிலும் செயல்பாடுகளிலும் ஊடுருவி விட்டது.

முன்பு, திருமணத்தின் போது மட்டும், மறைமுகமாக அறியப்பட்ட ஜாதிப் பிரிவு செய்தி, இன்று, இளம் பள்ளிப் பிராயத்திலிருந்தே, திணிக்கப்பட்டு விடுவதால் வயது வருவதற்குள் அனைவர் மனத்திலும் வெறுப்புகள் வேரூன்றி வளர்ந்து விடுகின்றன.

இத்தகு நிலையின் ஒரு விளைவே ஆலயப் பூசாரி பற்றிய தவறான பிரச்சாரங்களும் ஆகும். உதாரணமாக, பெரும்பான்மைக் கோயில்களில் நிரந்தரப் பூசாரி அமைப்பே இல்லாத போது பெரும்பான்மை ஆலயங்களில் ஒரு பிரிவினரே பூசாரியாக இருப்பதாகக் கூறப்படுவதை எப்படி ஏற்பது.

இந்திய அரசு 1961ல் தயாரித்த அனைத்து மாநிலங்களின் செய்தி தொகுப்பு நூல்களை (Census of India: volumes) ஆராயும் போது கீழ்க்கண்ட செய்திகள் தான் உண்மை நிலையாகத் தெரிகின்றன.

1) எல்லா ஆலயங்களிலும் வழிபாடு நடத்துபவர் அந்தண மரபினர் அல்ல.

2) எல்லா சிவ, விஷ்ணு ஆலயங்களில் கூட பூசாரி அந்தணரல்லர்.

3) சில கோயில்களில் மட்டுமே பூஜை செய்பவர்கள் இன்னமும் பரம்பரையாகத் தொடர்ந்து வருகின்றனர்.

4) பல கோயில்களில் பூஜை முறை ஒரு ஜாதியிடமிருந்து பிற ஜாதியினரிடமும், அடிக்கடியும் மாறி வந்திருக்கிறது.

5) புதிது புதிதாக பல்லாயிரக்கணக்கில் எழும்பி வருகின்ற ஆலயங்களில் எந்த மரபினருமே தாங்களே பூசாரியாக்கப்பட வேண்டும் என்று கோரவில்லை.

6) ஒவ்வொரு ஜாதியிலுமே ஒவ்வொரு ஊரிலுமே பூசாரிக் குடும்பம் இருந்திருக்கிறது. இம்மரபுப் பூசாரித் தொழிலாளர்கள், பணிப் பாதுகாப்பு கொடுக்கப்பட வேண்டும் என்று மட்டுமே கோருகின்றனர்.

7) இந்து மதம் எவருக்குமே இறைவழிபாடு நடத்த

தடை விதிக்கவில்லை. அதாவது அனைத்து ஜாதியினருமே பூசாரியாகும் வாய்ப்பை அளித்திருக்கிறது

பூசாரித் தொழிலாயினும் சரி, பிற தொழில்களாயினும் சரி, இந்து கலாச்சாரம் எல்லாப் பணிகளுக்குமே ஏட்டுப் படிப்பை விட செய்முறை அனுபவத்துக்கே (practical experience), ஆர்வத்துக்கே, ஈடுபாட்டுக்கே (devotion and dedication) முக்கியத்துவம் கொடுத்திருக்கிறது.

இன்று மிக நவீனமாகக் கருதப்படும் தொழில் முறைக் கல்வி, பணிக்கல்வி, படித்துக் கொண்டே ஊதியம் போன்ற கருத்துக்களை, இந்து சமுதாயம் தொன்று தொட்டே எல்லாத் துறையிலும் செயல்படுத்தி வந்திருக்கிறது.

இதனால் தான் புதிதாகப் பட்டம் பெற்ற வயதானவரை விட சிறுவயதிலிருந்தே பெற்றோரோடு கோயிலுக்குச் சென்ற குழந்தையையே பூசாரியாக ஏற்று ஆதரித்து, பணிப்பாதுகாப்பும் அளித்து வந்திருக்கிறது.

## கோவிலுக்கு ஏன் பூட்டும், காவலும்?

எல்லாமாய் இருக்கும் பரம்பொருளுக்கு, தனக்கென எதையும், பூட்டிப் பாதுகாக்கும் அவசியமில்லை. அவனுக்குச் சூட்டிய நகை திருடன் கையில் போய்விட்டதால் தெய்வத்துக்கு லாப–நஷ்டம் ஒன்றுமில்லை. ஒரு பொருள் என்னிடமிருக்கிறது. இல்லாமல் போய் விட்டது என்ற நிலைகளெல்லாம் மனிதர்க்கு, நமக்குத்தான்.

ஒரு குறிப்பிட்ட பொருளைத் தன்னுடையதாக நினைத்து அதை தனக்கே வைத்துக் கொள்ள விரும்பும் போது தான் மனிதன் மண்ணுக்கு வேலியும், பொன்னுக்குப் பெட்டியும்

அமைத்துப் பாதுகாக்க முயல்கிறான். மேலும் இப்போது கிடைத்த பொருள், பின்னால் கிடைக்காதோ என்ற அவநம்பிக்கையில் அப்பொருளை சேமிக்கத் தொடங்கிய பின்தான் மனிதனுக்கு தன்னிடம் உள்ளதை பிறர் பார்க்கக் கூடாது என்ற எண்ணமும், அதை மறைத்து வைக்கும் எண்ணமும், பிறர் அதனை எடுத்திடக் கூடாது என்று பூட்டிப் பாதுகாக்கும் எண்ணமும் வருகின்றன.

வீட்டுக்குப் பூட்டு என்பது கூட மனித வரலாற்றில் ஒரு அண்மை நிகழ்வே. அதுவும், பணத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கும் சமுதாயங்களில் (குறிப்பாக) நகரங்களில் மட்டுமே. இன்று கூட, பல கிராமங்களில், மலைப்பகுதிகளில், பொருள் சேர்க்கா குடில்களில் பூட்டும் பழக்கமில்லை. அவ்வீடுகளில் உள்ள சாதாரண கதவுகளும், எலி, பூனை, நாய், ஆடு, மாடு போன்ற சிறிய, பெரிய விலங்குகள் உள்ளே புகுந்து சட்டிப்பானைகளை உடைத்து விடாமல் இருப்பதற்காகத்தான்.

இது போலவே தான், கடவுளை வணங்குவதற்காக கட்டப்பட்ட கோயில்களிலும் வெகுகாலம் வரை பூட்டும், பாதுகாவலும் இருக்கவில்லை. அனைத்து சன்னிதிகளுக்கும் கதவுக்கான அமைப்பு கூட கிடையாது. ஒரு சில சன்னிதிகளுக்கு மட்டுமே கதவுகள் போடப்பட்டன.

மனிதரிடையே, நான் கட்டிய கோயில், நான் வைத்த சிலை, நான் போட்ட நகைகள் என்று இப்படி நாமே பலவற்றைச் செய்ததாகவும், அவற்றை எவரும் கவர்ந்திடக்கூடாது என்ற எண்ணமும், அதிகரித்த போது தான் கோயிலுக்கு பூட்டும், காவலும் ஏற்பட்டன.

வெகு அண்மைக் காலம் வரை, பல பெரிய

கோயில்களிலும், விலை மதிப்பற்ற நகைகள் இருந்தாலும் கூட, சாவிகளைக் கோயிலிலேயே ஏதாவது ஒரு தெய்வத்தின் பாதத்தில் (சிவாலயத்தில் பைரவரிடம் வைப்பது போல) வைத்து விடுவதே வழக்கமாயிருந்திருக்கிறது.

சாவியை கடவுள் காத்திடுவார் என்ற எண்ணத்தினால் அல்ல; சாவிகளை மனிதர்கள் எடுத்திட மாட்டார்கள் என்ற ஆழ்ந்த நம்பிக்கையாலேயே.

*மனிதனுக்கு, மனிதன் மீது நம்பிக்கை குறையும் போது தான்* மனிதன் ஆசைப்படும் பொருட்களுக்கு *பெட்டியும், பூட்டும், பங்களாவும், பாதுகாப்புப் படையும்* தேவையாயின.

இவற்றை கடவுள் கேட்கவில்லை;
அவருக்கு இவை தேவையுமில்லை.

## ஆண்டவனின் ஆலயங்கள் நலிந்து பாழாவதேன்?

கடந்த நூற்றாண்டு வரை, ஆறு கால பூஜையும், திருவிழாக்களும் நடந்திட்ட ஆயிரக்கணக்கான கோவில்களில் பல, இன்று, ஒரு நேர வழிபாடு கூட நடக்காமல், அல்லது விளக்கேற்ற கூட வசதியில்லாமல் போனது ஏன்?

ஆண்டவனுறையும் ஆலயங்கள் அவலத்திற்கு, அழிவிற்கு உள்ளாவதேன்?

இங்கு வருத்தப்பட வேண்டிய செய்தி – ஆலயங்களின் வருமானம் தடைப்பட்டதோ, அன்றாட வழிபாடுகள் குறைந்ததோ, கோயில்களில் விளக்கு எரியாததோ அல்லது பல நூறு வழிபாட்டிடங்கள் முற்றும் இடிந்தும் பாழடைந்ததோ அல்ல.

மாறாக, நம் அறிவின்மையாலும், அக்கறையின்மை யாலும், ஆலயம் என்ற சமுதாய அமைப்புக்கு நாம் கடமையைச்

செய்ய மறந்ததாலும், *"கொடுக்காவிட்டால் கல் கேட்குமா"* என்ற வாதித்ததாலும் இன்று நம்மிடையே வளர்ந்துவிட்ட சில அவல குணங்களுக்கும், நிலைகளுக்குமே நாம் வெட்கப்பட வேண்டும்.

இன்று சமுதாயத்தில் பலதரப்பு மக்களிடையேயும்

1) நம்பிக் கொடுக்கப்பட்ட பொருளை, பதவியை துஷ்பிரயோகப்படுத்தும் போக்கு பெருகிவிட்டது. 2) கொடுத்த வாக்கை மீறுவது அதிகரித்து விட்டது. 3) பெறுவதில் மட்டுமே நாட்டமுள்ள, திருப்பிச் செய்ய மறுக்கின்ற மனப்பான்மை வளர்ந்து விட்டது. 4) ஏழை–பணக்காரன் என்ற பேதமில்லாமல் எல்லோருமே கடன் வாங்குவதும் வாங்கிய கடனை ரத்து செய்யக் கோருவதும் சகஜமாகி விட்டது. 5) ஏதாவது ஒரு போர்வையில் இனாம் மற்றும் தனிச்சலுகை விரும்புவதும் அதை வலுக்கட்டாயமாகப் பெறுவதும் வழக்கமாகி விட்டது. 6) பணி ஏதும் புரியாமல் பணக்காரனாக விரும்பும் மனப்பான்மை பெருகி விட்டது. *கடமையாற்றும் உண்மை கலாச்சாரத்துக்கு பதில் கமிஷன்–லாட்டரி–ஊழல் மலிந்த போலி கலாச்சாரம் பரவிவிட்டது.*

இதனால் தான் ஆட்சியிலிருக்கும் பல கட்சி அரசுகளும், இன்று 1) பற்றாக்குறை வரவு–செலவு திட்டங்களை தீட்ட வேண்டியுள்ளது. 2) தேர்தல் வாக்குறுதிகளை நிறைவேற்ற முடிவதில்லை 3) அன்றாட்மும் வெளிநாடுகளிடமிருந்து கடனும் வாங்க வேண்டியுள்ளது.

நம் கையே நமக்கு உதவி என்பதை மறந்ததால் தான் சிறுசிறு திட்டங்களுக்குக் கூட, உதாரணமாக, நம் வீட்டுக்கு முன்புள்ள சாலையைப் போடவும், சாக்கடையைச் செப்பனிடவும்,

அன்னிய நாடுகளிலிருந்தும், உலக வங்கிகளிலிருந்தும் பிச்சை எடுக்க வேண்டியுள்ளது.

கடன் அளிப்பதாக அன்னியர் உறுதி கொடுத்ததையே "பெரும் சாதனை" யாக தம்பட்டம் செய்யும் அளவுக்கு கேவலமாகி விட்டோம்.

நாட்டுக்கே இந்நிலை என்றால், கோயில் என்ற கட்டிடம் குலைந்ததில் வியப்பேயில்லை.

ஒருபுறம் கணிசமான கோயில்கள் வளமும், வழிபாடுகளும் இழந்துவிட்டன. மறுபுறம் வருமானமுடைய சில ஆலயங்கள் வெறும் பணம் ஈட்டும் அமைப்புக்களாக மாறிவிட்டன. பெரும்பாலான கோயில்கள், பக்தர்களிடமிருந்து, நேரடியாகவும், மறைமுகமாகவும் பெறப்படும் கட்டணங்கள் மூலமே பராமரிக்கப்பட வேண்டிய நிலைக்கு வந்து விட்டன.

அறங்காவலர்களும், அதிகாரிகளும், அறநிலையத் துறைகளும், அரசாங்கங்களும் பல்லாயிரம் கோயில்களின் பரிதாப நிலையைப் பற்றிக் கவலைப்படாமல், கருத்துச் செலுத்தாமல், சில ஆலயங்களின் வருமான அதிகரிப்பைப் பற்றி மட்டுமே பெருமிதப்படும் அளவுக்கு கேவலமாகி விட்டோம்.

பொறுப்பிலுள்ளவர்கள், ஆலயங்கள் வருமானத்தை இழந்தமைக்கான காரணங்களை அறிந்திருந்தாலும் கண்ணை மூடிக் கொள்கிறார்கள். ஆலயங்களின் நிதிநிலை தொடர்பாக முக்கிய கேள்விகள் எழுப்பப்படுவதில்லை. எழுப்பப்படாமல் பார்த்துக் கொள்ளப்படுகின்றன. எழுப்புவோர் ஒதுக்கப் படுகின்றனர். தீர்வுகள் தெரிந்தாலும் நடவடிக்கை உடன் எடுக்கப்படுவதில்லை.

ஆலய வருமானம் தொடர்பாக சில கேள்விகளை

மட்டும் இங்கே காண்போம்.

1. ஆலயங்களின் வருமானம் எப்படி அதிகரித்தது? சொத்துகளின் மதிப்பு, நில விளைச்சல் உயர்வாலா? அல்லது வழிபாட்டுக் கட்டண உயர்வாலா?
2. வருமானம் யாரால் அதிகரித்தது? பக்தர்களின் காணிக்கையாலா அல்லது நிர்வாகத்தின் நிதியாண்மைத் திறனாலா? (resource management)
3. வழிபாட்டுக் கட்டணங்கள் ஏன் உயர்த்தப்பட வேண்டும்? வழிபாட்டுச் செலவுக்காகவா? அறநிலையத்துறை அலுவலகச் செலவினங்களுக்காகவா? அல்லது அரசின் நிதிப்பற்றாக்குறையை ஈடுகட்டவா?
4. வருமானம் கூடச் செய்த பக்தர்கள் மனநிறைவோடு திரும்பும் அளவுக்கு தரிசன வசதி செய்யப்படுகிறதா?
5. பெருகும் நிதி முறையாக செலவிடப்படுகிறதா?
6. ஆலயச் செலவினங்களை யார் வரையறுக்கின்றனர்? வழிபாடு நடத்தி வைப்பவர்களா? வழிபடும் பக்தர்களா? பல்லிடம் மாறும் அலுவலர்களா அல்லது பெரும்பாலும் ஆலயத்துக்கு வரவே நேரமில்லாத அரசியல்வாதிகளா?

"ஆலயம் செல்வது சாலவும் நன்று" என ஔவைப் பிராட்டி கூறியதை நினையாமல், அன்னியர் வாதத்தில் மதியிழந்து, அன்றாடமும் ஆலயங்கட்கு செல்ல மறந்ததாலும், அவற்றுக்கு நம் கடமையைச் செய்ய மறந்ததாலும் தான், இன்று, வருமானம் உள்ள கோயில்களில் கூட பணம் விரயமாவதை, கேள்வி கேட்கும் உரிமையை நாம் இழந்து விட்டோம்.

இதனால் தான் 1) ஆலயம் செல்லும் பக்தர்களின் எண்ணிக்கை அதிகரித்திருப்பினும் அவர்களுக்கான தரிசன

வசதி பெருகவில்லை. 2) வழிபாடுகள் அதிகரித்திருப்பினும் அவற்றைச் செயலாக்கிடும் அர்ச்சகர்களின் எண்ணிக்கை கூடவில்லை.. காலி இடங்கள் கூட நிரப்பப்படாததால் வழிபாடு நடத்தி வைப்பது தொடர்பான பணிகளில் ஈடுபட்டிருப்போரின் எண்ணிக்கை குறைந்து கொண்டே வருகிறது. 3) இந்த சூழ்நிலையில் பூசைகள் முறையாகவும், முழுமையாகவும் நடத்தப்படாமல், வெறுமனே தேங்காய் உடைத்து சூடம் காண்பிக்கப்படுவதோடு வழிபாடு முடிந்து விடுவதில் வியப்பே இல்லை.

இத்தகு அவலநிலைக்குக் காரணமான *சுயநல பிராச்சாரக் குழுக்களோ, பகுத்தறியாத பொது மக்களோ, சிரத்தையற்ற நிர்வாக அமைப்போ, கட்சி விசுவாச அடிப்படையிலான அரசுக் கொள்கைகளோ* கண்டிக்கப் படுவதில்லை.

மாறாக, "ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோயில் ஆண்டி"என்ற வகையில், பல அலுவலகங்களிலும் உள்ள ஊழியர்களைப் போல எவ்வகை விடுப்பும், (EL, CL, ML அதாவது, தற்செயல் விடுப்பு, ஈட்டிய விடுப்பு, மருத்துவவிடுப்பு போன்று) ஓய்வும் இல்லாமல், நாள்தோறும், 365 நாளும், பணிபுரியும் பூசாரிகளை மட்டும், இறைப்பணித் தொண்டர்களை மட்டும், வாய்க்கு வந்தபடி தூற்றுவது எல்லோருக்கும் வழக்கமாகி விட்டது.

*அநியாயமாய் தூற்றுவதே அறிவின் இலக்கணமாகக் கருதப்படும் நாகரீகத்தில் ஆலயங்கள்* நலிந்தும், இடிந்தும், பாழாவதிலும் வியப்பில்லை. சுவடே இன்றி *முற்றும் மறையாமல் போகாததே ஆச்சரியப்பட வேண்டிய விஷயம்.*

# கும்பாபிஷேகம் என்றால் என்ன? ஏன்?

கும்பம் என்றால் குடம் போன்ற அமைப்பு. அபிஷேகம் என்றால் நீராட்டல்.

வீட்டிலோ, ஆலயத்திலோ, தெய்வத்திருவுருவங்களுக்கு அன்றாடமும் குடத்தாலேயே நீராட்டினாலும், அதனை அபிஷேகம் என்று மட்டுமே கூறுகிறோம். மாறாக, ஆலயக் கருவறைக்கு மேலே விமானத்தின் உச்சியில் உள்ள கும்பத்துக்கு (கலசத்துக்கு) நீராட்டுவதை கும்பாபிஷேகம் என்று குறிப்பிடுகிறோம்.

அன்றாட இறை நீராட்டலில் தெய்வங்களுக்கு கும்பத்தால் அபிஷேகம். ஆலயங்கள் புதிதாக நிர்மாணிக்கப்படும் போதும், பழுது பார்த்து சீராக்கப்படும் போதும் கும்பத்துக்கு கும்பத்தால் அபிஷேகம்.

இக்கும்பாபிஷேகத்துக்கு முக்கிய நோக்கம் இரண்டு.

1) ஆன்மீகச் செறிவூட்டல்

2) சுத்திகரிப்பும், பொலிவிப்பும்

நம் உடலைப் பேணுவதில், சத்தூட்டம் அளிப்பதும், சுத்திகரிப்புச் செய்வதும் தொடர்ந்து தேவைப்படுவது போலவே, இறைவனை வழிபடுவதற்காக நாம் கட்டிக் கொண்டுள்ள கோயில்களிலும் தூய்ப்புப் பணியும், செறிவூட்டலும் அவசியமாக உள்ளது. இவ்விரண்டு நலப் பணிகளையும் ஒரு சேர அமுல்படுத்துவதே கும்பாபிஷேகம் என்ற சிறப்புச் செயல்திட்டம் ஆகும்.

முதலில் செறிவூட்டலைக் கருதிடுவோம்.

நம் உடல் – மன ஆரோக்கியத்துக்கு உணவில்

அறுசுவையையும் சேர்க்க வேண்டுமாயினும் அன்றாடமும் நம்மால் அப்படிச் செய்ய இயலுவதில்லை. இதனால் ஏற்படும் சத்துக் குறைவை ஈடுகட்டுவதற்காகத் தான் பண்டிகை தினங்களில் ஊட்டம் மிகுந்த விருந்தை உண்ணுகிறோம்.

இது போலவே, ஆலயங்களிலும், அன்றாடமும் விரிவாக வழிபாடு நடத்திட இயலாததால் ஏற்படும் குறைவை ஈடுகட்டுவதற்காக, மாதந்தோறும் சிறப்பு வழிபாடுகளும், வருடமொருமுறை பெருந்திருவிழாக்களும், பன்னிரண்டு வருடத்துக்கொரு முறை கும்பாபிஷேகமும் நடத்தப்பட்டு வருகின்றன.

செறிவூட்டலை அடுத்து சுத்திகரிப்பைக் காண்போம்.

பல நேரங்களில் நமக்கு நன்கு நீராடுவதற்கு நேரமில்லாத போது, நாம் அவசர அவசரமாக கைகால் மட்டும், முகம் மட்டும், உடல் மட்டும் என்று ஏதாவது ஒரு குறிப்பிட்ட பகுதியை மட்டும் சுத்திகரித்துக் கொள்கிறோம். இதனால் ஏற்படும் குறையை நீக்கி, உடலை சீர் செய்வதற்காக, வாரமொருமுறை எண்ணைக் குளியல், முடிந்த சமயங்களில் ஆற்றுக் குளியல், அருவிக் குளியல், கடல் குளியல் என நெடுநேரம் நீராடித் தூய்மை அடைகிறோம்.

புறப்பகுதி தூய்ப்பிப்போடு மட்டும் நில்லாமல், உள்பகுதிகளையும் சுத்திகரிப்பதற்காக, கஷாயம், விளக் கெண்ணை போன்றவற்றைக் குடித்தும், உண்ணா நோன்பு போன்ற விரதங்களை மேற்கொண்டும், நல்ல பயனை அடைகிறோம்.

இத்தகு தூய்ப்பு மற்றும் செறிவூட்டல் செயல்பாட்டை நம்முடைய வீடுகளின் பராமரிப்பிலும் காணலாம். அன்றாடமும்

வீட்டின் எல்லா மூலை முடுக்குகளையும் தூய்ப்பிக்காத குறையைப் போக்குதற்காக வாரமொரு முறை, மாதமொருமுறை ஒட்டடை அகற்றுகிறோம். வருடமொரு முறை முற்றும் தூசு தட்டி சுண்ணாம்பு அடிக்கிறோம். மேலும் பல வருடங்களுக்கு ஒருமுறை பழுதுபார்த்து, கட்டிடத்தை திடப்படுத்துவதோடு பொலிவூட்டும் வகையில் வர்ணமும் பூசுகிறோம்.

இது போன்ற சிறப்புப் பணியே ஆலயக் கும்பாபிஷேகமும் ஆகும்.

உடலாயினும் சரி, வீடாயினும் சரி, சத்தூட்டலிலும், சுத்திகரிப்பிலும் எல்லோருமே, எப்போதுமே ஒரே வழியையோ ஒரே பொருளையோ கையாள்வதில்லை.

உதாரணமாக, ஒரே நோய்க்கு (ஆஸ்துமா) அல்லது தொல்லைக்கு (கொசு பாதிப்பு) மருந்துகளும் எதிர்ப்புப் பொருட்களும் ஒன்று போலிருப்பதில்லை. ஒரே மருந்தே பல வடிவில் (அதாவது) திரவமாக, திடப் பொருளாக அல்லது ஆவியாக இருக்கலாம். பூச்சிகளை அழிக்க நாம் பொடியைத் தூவலாம்; திரவத்தைத் தெளிக்கலாம்; அல்லது குறிப்பிட்ட வாசனையை – புகையையும் பரப்பிடலாம். கண்ணுக்குத் தெரிந்த பொருட்களையோ, கண்ணுக்குப் புலப்படாத காற்றையோ உபயோகிக்கலாம். திடப்பொருளை விட திரவத்தை விட, காற்றைவிட பல வகையிலும் சக்தி மிகுந்த ஒலி அதிர்வுகளையும் உபயோகிக்கலாம்.

இவ்வடிப்படையில் தோன்றியதே இன்றைய white sound machine என்ற கொசு விரட்டும் மின் சாதனமும் அன்றைய மந்திரங்களும் ஆகும்.

அன்றாட ஆலய வழிபாடுகளிலும் சிறப்பான கும்பாபி

ஷேகங்களிலும் நெடுநேரம் மந்திரங்களை உச்சரித்து, அரிய திறன் வாய்ந்த மூலிகைகளை வேள்வியில் எரிப்பதால், காற்று-வெளியிலுள்ள தீங்கு பயக்கும் நுண்ணுயிர்கள் அழிக்கப்படுவதோடு நம்மால் தாங்க முடியாத கதிரியக்கங்களும் விலகி, சுற்றுச் சூழல் மனித வாழ்வுக்கு ஏற்றதாகத் தூய்மையாகிவிடுகிறது.

வேத மந்திரங்களின் அரிய திறனையும், வேள்விப் புகையின் சக்தியையும், அவற்றால் நமக்கு விளையும் அளப்பரிய பயனையும் நிரூபிக்க, 1984ல் போபாலில் ஏற்பட்ட நச்சுவாயு பரவிய நிகழ்வை விட வேறு சிறந்த எடுத்துக்காட்டு இருக்க முடியாது. அன்றைய நச்சு வாயுப் பரவலில் ஆயிரக்கணக்கானோர் இறந்து, பல்லாயிரவர் நிரந்தரமாகப் பாதிக்கப்பட்ட போது, அக்னிஹோத்ரம் என்ற நித்திய வேள்வியைச் செய்து வந்த இல்லத்தவர்கள் மட்டும் எவ்விதத் தீங்கும் அடையாதிருந்தது உலகத்தையே அதிசயிக்க வைத்தது.

அகந்தோறும், அன்றாடம் வேள்வி செய்யாவிடினும் ஆலயங்களிலாவது அவ்வப்போது வேள்விகள் நடத்தினால் சுற்றுச் சூழல் மாசு குறைந்து சீர்மை பெறும்.

கொசு போன்றவற்றை அழிப்பதற்கும், மேகங்களை மழை பொழியச் செய்வதற்கும், கோடிக் கணக்கில் செலவு செய்து பக்கவிளைவு உடைய செயற்கை இரசாயனங்களைப் பரப்புவதை விட, ஆயிரக்கணக்கில் மட்டுமே செலவு ஆகின்றதும், இயற்கைப் பொருட்களையே அடிப்படையாகக் கொண்டதுமான வேள்வி-களை விரிவாக, முழுமையாகச் செய்தால் பெரும்பயனை அடைந்திடலாம்.

கும்பாபிஷேகத்தின் உட்கருத்தையும், அதன் செயல்பாடுகளின் திறனையும், பயனையும் நாம் அறியாததால்,

பல்லோர்க்கும் அறிவுக்கும் முறையான கூட்டம் 3) இணைவோரை வாழ்த்திடுவதற்காக எல்லோரும் கூடுகின்ற திருவிழா.

இவ்வறிவிப்பையும் வாழ்த்தலையும், பல்லோர் மறந்து விட்ட பண்டைமொழியில் (கிரேக்கம், சமஸ்கிருதம்) கூறினாலும் சரி, இன்றும் வழக்கிலுள்ள மொழியில் (தமிழ், ஆங்கிலம், ஹிந்தி) பகர்ந்தாலும் சரி, நடக்கும் நிகழ்ச்சி ஒன்றே.

முன்னதை மூடத்தனமென்றும். பின்னதை சீர்திருத்தவாதம் என்றும் கூறுவது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதேயாகும்.

மூடத்தனம் என்று நினைத்தால் இருவகைத் திருமணமும் அவசியமற்ற காசு கரைக்கும் சடங்கே. சீர்திருத்தம் என்று எண்ணினால், இருவகை மணமும் மனிதரை மிருகநிலை உறவிலிருந்து இல்லறம் என்ற நல்லுறவுக்கு உயர்விக்கும், பண்புவிக்கும் நாகரீகமான வழக்கே.

மிருகங்களிடையிலான *குறுகிய இணைவை* மனிதரிடையே *நெடிய உறவாக* மட்டுமின்றி, *திருஉறவாகவும்* மாற்றிட வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்காகவே, ஆலயங்களில், தெய்வத் திருவுருவங்களுக்கு திருக்கல்யாணம் செய்விக்கப்படும் திருவிழாக்கள் ஏற்பட்டுள்ளன.

பல நூற்றாண்டுகளாக தொடர்ந்து நடக்கும் திருக்கல்யாண விழாக்களில் சொக்கநாதர் மணப்பது மீனாட்சியையே, ராமன் சீதையையே என்பதைப் பார்த்து நாமும் நம் வாழ்வில் கட்டுப்பாடோடு இல்–உறவு மேற்கொள்ள வேண்டும் என்பதே திருக்கல்யாணங்களின் நோக்கம்.

# ஆண்டவனுக்கு பல அபிஷேகங்கள் ஏன்?

பூஜை வேளையில், தெய்வச் சிலைக்கு (உதாரணமாக) சிவலிங்கத்துக்கு அன்றாடமும் பல அபிஷேகங்கள் செய்யப்படுவதை பார்த்த ஒரு குழந்தை தன் பெற்றோரைப் பார்த்து, அவர்கள் தன்னைக் குளிப்பாட்டுகையில் சோப்பை மட்டும் தானே உபயோகிக்கிறார்கள் என்ற கேள்வியைக் கிளப்பியது.

இறைவனுக்கு பால், தயிர், சந்தனம் மற்றும் பல பொருட்களால் அபிஷேகம் செய்வதால் நமக்கு பல்வேறு நன்மைகள் கிடைக்கிறது என்ற பதில் குழந்தைக்கு திருப்தி அளிக்கவில்லை. அப்படியென்றால், தன்னையும் ஏன் அவர்கள் எல்லாப் பொருட்களையும் ஊற்றி நீராட்டவில்லை என்ற அடுத்த கேள்வியை எழுப்பியது.

மனிதர்கள், அன்றாடம் ஓரிருவேளை, சில நிமிடங்கள் மட்டுமே நீராடும் போது, தெய்வத் திருவுருவங்களுக்கு மட்டும் ஒரே நாளில் பல முறையும், நெடு நேரமும் பல பொருட்களாலும் அபிஷேகம் செய்வது ஏன்?

இங்கு, எப்பொருள் அபிஷேகத்தால் எப்பயன், கிடைக்கும் என்ற செய்தியை விட *மனிதரின் நீராடலுக்கும், மகேசனின் நீராட்டுவிப்புக்கும்* உள்ள அடிப்படை வித்தியாசத்தை அறிவது மிக முக்கியம்.

நம் நீராடலின் போது, உடலைத் தேய்ப்பதாலும், தொடர்ந்து நீர்படுவதாலும், ஸ்நானப் பொடி அல்லது நறுமணசோப் உபயோகிப்பதாலும் சிறிது நேரம் புத்துணர்வு ஏற்பட்டாலும், அடிப்படையில் மனிதரின் குளியல் உடலின்

புறத்தூய்மைக்காகவே – சைக்கிளுக்கோ, காருக்கோ water service, oil service செய்வது போலவே.

உள்புறத்துக்கான ஊட்டச்சத்துகளை நாம் பெரும்பாலும் உணவு மூலமாகவே பெற்று வருகிறோம். Batteryல் மின் பரிமாணம் குறையும் போதெல்லாம் அவ்வப்போது மின்ஊட்டம் (charge) செய்வது போல பசி, அசதி ஏற்படும் போது உணவு உட்கொண்டு தெம்பு பெறுகிறோம்.

இவ்வூட்டமேற்றலில் மனிதர்க்கும், batteryக்கும் உள்ள வித்தியாசத்தை இங்கு மறந்திடக்கூடாது. மனிதரைப் பொறுத்த வரையில் அவரவரே உட்கொள்கிறோம். ஆனால் battery தானாகவே சக்திச் செறிவு (charge) பெறுவதில்லை. மின்கலப் பெட்டிக்கு நாம் தான் மின் இணைப்பு கொடுத்து செறிவூட்ட வேண்டியுள்ளது. மேலும் அதற்கான ஊட்டப் பொருளும் நம் உணவைப் போன்று திடமானதாக இல்லை. அதோடு மின் ஊட்டம் அளிக்கப்பட்டாலும் அளிக்கப்படாவிடினும் batteryக்கு லாப – நஷ்டம் எதுவுமில்லை. நமக்குத் தான் நன்மையும், நன்மையில்லாமையும். மின்கலத்தை நாம் செறிவிப்பதற்குக் காரணம் நம்முடைய சுயநலமே.

இது போன்ற நிலைமையைத் தான் தெய்வத் திருவுருவங்களின் அபிஷேகம் மற்றும் பிற வழிபாட்டுச் செயல்பாடுகளிலும் காண்கிறோம்.

மனிதன் தானும் இன்றமயம் என்ற உணர்வை இழந்து, மறந்து, தன் நன்மையை தன்னுள் நாடாமல் புற உலகில் தேடும் போதுதான், தான் காணும் பல்வேறு பொருட்களையும் தனக்கு நன்மையளிக்கும் வகையில் மாற்றி அமைத்துக் கொள்கிறான். இதனால் உருவானவையே இன்றைய மின்கலப் பெட்டியும்

அன்றைய கல்லால் உருவான தெய்வ திருவுருவச் சிலையும் ஆகும்.

எல்லா மின்கலன்களும் (battery) மின்சக்தியைத் தேக்கிக் கொடுக்கும் உபகரணங்கள் தான் என்றாலும், குறிப்பிட்ட அளவு மின்திறனை குறிப்பிட்ட இடத்தில் அல்லது குறிப்பிட்ட செயல்பாட்டுக்காக பெறுவதற்காக, உதாரணமாக, கைக்கடிகாரத்துக்கென்று, கைவிளக்குக்கென்று, கார், லாரி இஞ்சினை இயக்குவதற்கென்று, காமிராவுக்கென்று, batteryகளை பல வடிவங்களில், அளவுகளில், திறன்களில் பல்வேறு பொருட்களைக் கொண்டு தயாரிக்கப்படுவதை எல்லோரும் அறிவோம்.

இதுபோலவே தான் நம் முன்னோர்களும், நெடுநாள் பழுதாகாத கல்லையும், உலோகங்களையும் உபயோகித்து அவற்றின் நன்மை – நவிலும் குணங்களின் அடிப்படையில், தெய்வத் திருவுருவங்களை பல்வேறு வடிவங்களிலும் உருவாக்கி வந்திருக்கின்றனர்.

ஒரு batteryயின் திறனுக்கு (capacity) ஏற்ப, வடிவுக்கு (shape & design)ஏற்ப, சிறிது பெரிது என்ற அளவுக்கு ஏற்ப, அதனை உருவாக்கப் பயன்படுத்தப்பட்ட பொருள்களுக்கு ஏற்ப, அதை நாம் பயன்படுத்தும் அளவுக்கு ஏற்ப என்று பல அடிப்படைகளைப் பொறுத்தே அந்த batteryக்கு அடிக்கடியோ, குறிப்பிட்ட வகையிலோ, நாம் மின்ஊட்டம் அளிக்கிறோம்.

இதுபோலவே தான், இறைத் திருவுருவங்கள் என்ற batteryகளுக்கும் பல்வேறு வகையான வழிபாடுகளையும் அவற்றின் அங்கமான அபிஷேகங்கள், அர்ச்சனைகளையும்

செய்து வருகிறோம்.

இரண்டு மனிதர்கள் அருகருகே வந்தால், அவர்கள் அருகாமைக்கு ஏற்ப, பக்கவாட்டில் அல்லது எதிரில் நிற்பதற்கு ஏற்ப, இருவர்க்கிடையேயும் *உயிர்ச் சக்திப் பகிர்வு/தாக்கம்* ஏற்படுவது போலவே நாம் இறைவடிவங்களை அணுகும் போதும் உயிரோட்ட நகர்வு (life - energy conduction, transmission) ஏற்படுகிறது.

இந்த அணுகல்களின் போது, அடியவர்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப, அவர்கள் வழிபடும் நேரத்திற்கு ஏற்ப, பெற விரும்பும் நன்மைப் பரிமாணத்துக்கு ஏற்ப இறைத் திருவுருவுக்குச் செய்ய வேண்டிய செறிவூட்டச் செயல்பாடுகளும் (வழிபாடுகளும்) மாறுபடுகின்றன அல்லது அதிகரிக்கின்றன.

நாம் ஒரு நிமிடம் மட்டும் நின்று கும்பிடுவதா யிருந்தால், சில திருநாமங்களை வாயால் மட்டும் கூறுகிறோம். சற்று கூடிய நேரம் உட்கார்ந்து கும்பிடுவதாயிருந்தால் திருப் பெயர்களைக் கூறுகையில் மலர்களையும் சாற்றி அர்ச்சனை செய்கிறோம். மேலும் அதிக நேரம் வணங்கினால் அபிஷேக அலங்காரங்கள் என்று வழிபாட்டுச் செயல்பாடுகளும் கூடுகின்றன.

வழிபாட்டு நேரத்தைப் போலவே வழிபடுவோர் எண்ணிக்கையையும் பொறுத்து பூசைகள் மாறுபடும். உதாரணமாக, மிகச் சிலரே, அதுவும் எப்போதாவது மட்டுமே வழிபடும் கோயில்களில் மிகச் சுருக்கமான அளவிலேயே பூஜை நடக்கிறது. அன்றாட பூஜை கூட இருப்பதில்லை. அநேகமாக வருடமொரு முறையே விரிவான வழிபாடும் இருக்கும்.

மாறாக, அன்றாடமும் பல்லாயிரக்கணக்கான,

லட்சக்கணக்கான மக்கள் வழிபடச் செல்லும் ஆலயங்களில் (அதாவது *நன்மை-நாடல்* அதிகமாக உள்ள இடங்களில்) அங்குள்ள தெய்வத்திருவுரு மூலமாக நாம் தொடர்ந்து நலன் பெற்றுக் கொண்டேயிருக்கவேண்டும் என்பதற்காக, தினந்தோறும், அடிக்கடியும் விரிவான பூஜைகளும், மற்றும், மாதந்தோறும் திருவிழாக்களும் நடைபெறுகின்றன.

காலபூஜை எனப்படும் சிறிய அளவிலான இறைச் செறிவூட்டல்கள் மற்றும் உத்ஸவங்கள் (திருவிழாக்கள்) என்ற பெரிய அளவிலான செறிவூட்டல்களின் கருத்தையும், நோக்கையும், திறனையும், பயனையும் அறியாமல், அவற்றைச் சுருக்கியும், நிறுத்தியும் விட்டதனால் தான், இன்று, பல பெரிய திருக்கோயில்களும் அவற்றைச் சுற்றியிருந்த கிராமங்களும் குடிகளும் வளமை குன்றி பொலிவிழந்து விட்டன.

இதை உணர்த்துவதற்காகத் தான் நம் முன்னோர்கள்.

*"பூசை குறையப் பஞ்சம் பெருகும்"*

*"பூசை பெருக பேறு (நன்மை) கூடும்"* என்று கூறினர்.

ஒவ்வொருவரும், தம்முள்ளேயே தெய்வத்தைக் கண்டு, தியானத்தில் ஆழ்ந்து, எவ்வகைத் திருவுருவையோ அல்லது வழிபாட்டு இடங்களையோ நாடாத அளவுக்கு முதிர்ச்சி அடையும் வரை, விரிவான வழிபாடுகள் செய்து நன்மை பெறுவதும், பூசையே செய்யாது பஞ்சத்தில் உழல்வதும், நம் கையில் தான் இருக்கிறது.

## கடவுளை/ஆலயங்களை சுற்றுவது ஏன்?

இறை வழிபாட்டில் பிரதக்ஷிணம், அதாவது, வலம் வருவதற்கு முக்கியத்துவம் அளிக்கப்படுவது ஏன்?

வீடுகளில் செய்யப்படும் சிறு ஹோமங்கள் தொடங்கி பலர் கூடி வணங்கும் கோயில்கள் வரை வழிபாட்டு இயலில் சுற்றிவரும் நிலையின் அடிப்படையிலேயே யாக சாலையும், ஆலயக் கட்டிடமும் அமைக்கப்படுவது ஏன்?

ஆலயத்தின் உள்சென்று வழிபடு முன்பும், வழிபட்ட பின்னர் வீடுதிரும்பும் முன்னும், ஒரு முறையாவது கோயிலை வலம் வர வேண்டும் என்று ஏன் வலியுறுத்தப்படுகிறது. வலம் வரும் அளவுக்கு அமைப்பு இல்லாத ஆலயங்களில் கூட ஆத்மபிரதக்ஷிணம் (அதாவது) தன்னைத் தான் சுற்றலாவது ஏன் விதிக்கப்படுகிறது.

சிறு பொருள் முதல் அகண்டாகார வெளியில் உள்ள பெரும் கோள்கள் வரை எல்லாமே நகர்ந்து கொண்டேயிருக்கின்றன. நாம் எப்போதும் சுற்றிக் கொண்டே இருக்கிறோம். *நகர்வின்றி நிகழ்வில்லை. சுழற்சி இன்றி சக்தியேயில்லை.* சைக்கிளில் உள்ள சிறு டைனமோ முதல் ஆலைகளில் உள்ள பெரும் generatorகள் மற்றும் அணைகளில் உள்ள பிரம்மாண்டமான turbine வரை சக்தியை உருவாக்கும் எல்லா இயந்திரங்களுமே சுழற்சியின் அடிப்படையிலேயே அமைந்திருக்கின்றன.

மின்கடத்தி இழைகளையோ அல்லது காந்தத்தை யோ, ஏதாவது ஒன்றை அசைவற்ற ஸ்திரநிலையிலும், மற்றதை சுழலும் வகையிலும் அமைத்து சுழற்சியை உருவாக்கும் போது தான் மின்சக்தி உற்பத்தியாகிறது. இதே அடிப்படையில் சுழற்சி மூலம் சக்தி அளிப்பதாக அமைக்கப்பட்டிருப்பதே ஆலயமும் அதனை வலம் வரும் வழிபாட்டு முறையும் ஆகும்.

ஒரு generatorல் காந்தத்தின் சக்தியைக்

கூட்டுவதால் மட்டுமோ அல்லது மின் இழையின் பரிமாணத்தை அதிகரிப்பதால் மட்டுமோ மின்சாரத்தை உருவாக்க முடியாது. அது போலவே தான் ஆலயங்களிலும், திருவுருவங்களுக்கு விரிவான பூசைகள் நடத்துவதால் மட்டுமோ அல்லது அதிக அளவில் மக்கள் கூடுவதால் மட்டுமோ நாம் அதிக நன்மையைப் பெற்றிட முடியாது.

கைவிளக்கில் (torch), cell இருப்பதாலோ ஒளி கிடைக்கக் கூடிய bulb இருப்பதால் மட்டுமோ வெளிச்சம் கிடைத்து விடுவதில்லை. button/switch ஐ (இயக்குவிப் பானை) போட்டால் தான் பயன் கிடைக்கிறது.

இது போன்றே, சுழற்சி – நகர்வால் சக்தியை உருவாக்கும் செயல்பாடு தான் ஆலயத்தை வலம் வருதலும் ஆகும். இதனால் தான் பண்டைக் காலந்தொட்டு மக்கள் ஆலயத்தில் எழுந்தருளும் அசையாத் திருவுருவத்தை வலம் வருவதோடு, திருவிழாக்களில் உலாவரும், நகரும் வடிவத்தையும் வெறுமனே வீட்டு வாசலிலிருந்து அல்லது மாடியிலிருந்து மட்டும் பார்க்காமல் ஒவ்வொரு வீட்டு வாசலிலும் சுவாமி சில நிமிடங்கள் நிற்கும் போதெல்லாம் மும்முறை வலம் வந்திருக்கின்றனர். நடக்க இயலாதிருந்தால் மட்டுமே இருக்குமிடத்திலிருந்தே தரிசனம் செய்தனர்.

வலம் வராததால் நஷ்டம், பவனி வரும் பரம் பொருளுக்கு அல்ல. கிடைத்ததை கை நழுவ விடும் நமக்கே.

டைனமோவை ஒரிரு சுற்றுமட்டும் சுழலச் செய்யும் போது விளக்கில் மின்னோட்டம் இருந்தாலும், நம் கண்ணுக்கு பயன்படும் அளவுக்கு பிரகாசமான ஒளி கிடைப்பதில்லை. தொடர்ந்து பலமுறை சுற்றும் போதே திருப்தியான பலன் கிடைக்கிறது.

இதனால் தான் முன்னோர்கள் ஆலயத்தை வலம் வரும் போது பல சுற்றுகள் வந்திடுமாறு பரிந்துரைத்திருக்கின்றனர். காலையிலும், மாலையிலும், பகலிலும், இரவிலும் என்று ஒவ்வொரு குறிப்பிட்ட நேரத்திலும் ஒவ்வொரு வகையிலும் (அடிப்பிரதக்ஷிணம், சோமசூக்த பிரதக்ஷிணம்...) வலம் வருவதால் ஏற்படக்கூடிய பயன்களையும் பட்டியலிட்டிருக்கின்றனர்.

ஆத்ம-பிரதக்ஷிணம் முதல் அங்க-பிரதக்ஷிணம் (உருண்டு கொடுத்தல்) வரையும், அரசமரம் வலம் வருதல் முதல் ஆலயத்திருச்சுற்றை வலம் வருதல் வரையும், எல்லா வலம் வரு முறைகளுமே, சுழற்சியின் நகர்வால், உயிரோட்டத்தால் நாம் நன்மைகள் யாவும் பெற்றிட வேண்டும் என்பதற்காகவே.

## *வழிபாட்டில் வேண்டிக்கொள்ளல் அவசியமா?*

அன்றாடம், நாம் ஈடுபடுகின்ற சிறுசிறு பணிகளாயிருந்தாலும், வாழ்நாளில் எப்போதோ ஒரிருமுறை நமக்கென ஒரு வீடு கட்டும் பெரும் பணியாயிருந்தாலும், ஒவ்வொரு செயல்பாட்டைத் துவங்கு முன்பும், நாம் நம் எதிர்பார்ப்புக்கள் என்ன என்பதைத் தீர்மானித்துக் கொள்கிறோம்.

பலர் தம் விருப்பை, வாய்விட்டு பிறர் அறிய சத்தமாகக் கூறிடுவர். சிலர் நெஞ்சுள்ளேயே ரகசியமாக வைத்திருப்பர். ஆனால், எவருமே, எக்காரியத்தையும் "இதற்காக" என்று நேர்ந்து கொள்ளாமல் செய்வதில்லை.

இறைவழிபாட்டிலும், நம் எதிர்பார்ப்பை (அதாவது) வழிபடும் நோக்கத்தை தெரிவிப்பதைத் தான் *சங்கல்பம்* என்று

கூறுகிறோம். இந்த சங்கல்பம் *(நேர்ந்து கொள்ளல்)* அவரவர் வழிபாட்டுக்கு ஒதுக்கும் கால அளவுக்கு ஏற்ப, சுருக்கமாகவோ, விரிவாகவோ இருக்கும்; இருக்கலாம். உதாரணமாக, அன்றாடமும், நாம் செல்லும் வழிகளில் இருக்கும் கோயில்களைக் கண்டதும், பணிக்குச் செல்லும் அவசரத்தில், போகிற போக்கிலேயே, வாகனத்தில் இருந்தபடியே, கோயிலிலுள்ள தெய்வத்தை நோக்கி "காப்பாற்று" என்று ஓரிரு வார்த்தைகளை மட்டுமே கூறுகிறோம்.

ஆனால் ஓய்வுநாளாக இருப்பின், அதே விநாயகர் அல்லது மாரியம்மன் திருவுருவங்களுக்கு முன் நெடுநேரம் வழிபடும் போது, அத்தெய்வம், நம்மை, நோயிலிருந்து, ஆபத்திலிருந்து, பயத்திலிருந்து, தொல்லையிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று ஒரு பெரும் பட்டியலையே முன் வைக்கிறோம்.

இவ்விரண்டு வகை (குறுகிய–நெடிய) வேண்டலும், நம் நன்மை நாட்டத்தால் உருவானவையே.

*"வேண்டத்தக்கது அறிவோய் நீ வேண்டுவன யாவும் அருள்வோய் நீ"* என்ற அளவுக்கு மன முதிர்ச்சி வரும் வரையும் நமக்கு இன்னின்ன வேண்டும் என்று எதிர்ப்பார்ப்புகள் இருக்கும் வரையும், நாம் நம்முடைய விருப்புகளை வெளிப்படையாகக் கூறி வழிபடுதலே இயற்கையான, முறையான செயல்பாடாகும்.

இந்த நேர்ந்து கொள்ளல் முறை எல்லா சமயங்களிலும் இருந்தாலும், இந்து மதத்தில் உருவாகியுள்ள மிக விரிவான சங்கல்பத்தைப் பற்றியாவது இங்கு அறிதல் அவசியம்.

*நம் சங்கல்பம் வெறும் வேண்டுதல் பட்டியல் அல்ல.* நலம் – நாடல் என்பது அதில் ஒரு சிறு அங்கமே. சங்கல்பம் கீழ்க்கண்ட அம்சங்களையும் கொண்டுள்ளது.

1) நிலப்பத்திரங்களில் நான்கெல்லை வர்ணனை இருப்பது போல, அகண்டாகார படைப்பு வெளியில் நாம் (அதாவது வழிபடும் பக்தர்) இருக்கும் இடத்தை (ஊரை, வழிபாட்டிடத்தை) குறிப்பிடுதல். 2) அவ்வூரின் (கோயிலின்) தொன்மையை, மேன்மையைப் பகர்வது. 3) கணிதற்கெட்டாத கோடானு–கோடி வருடங்களைக் கொண்ட காலச்சூழலில் நம் செயல் நேரத்தைக் குறிப்பிடுவது. 4) வழிபடு நேரத்தின் தன்மையை, சிறப்பைப் பகர்வது. 5) வணங்கப்படும் வழிபாட்டிடத்தில் கடவுளுக்கு வழங்கும் பெயரைக் கூறுவது. 6) பின்பற்றப்படும் வழிபாட்டு வகையை, அதாவது, அர்ச்சனை, அபிஷேகம் என்பதைக் குறிப்பது. 7) வழிபாடு நம்மாலேயே அல்லது பிறர் மூலமாக செய்யப்படுவதைக் கூறுவது. 8) பயனடைய வேண்டுபவர்களை – நம்மை, நம்மவரை, நம் ஊராரை, நானிலத்தவரைக் குறிப்பிடுவது. 9) நாம் நன்மையாகக் கருதுவதைப் பட்டியலிடுவதோடு அறியப்படா நலன்களையும் நாடுவது. 10) அறிந்தும், அறியாமலும் பிறர்க்கும், பிறவற்றுக்கும் நாம் இழைத்திருக்கக் கூடிய தீமைகளை ஒப்புக் கொண்டு வருந்துவது. 11) கடமைகள் ஆற்றாததை நினைவது. 12) நம் நிலைமை எவ்வளவு கீழ்மையாயினும் நம்மை அருளி ஏற்றிடுமாறு இறைவனை வேண்டுவது.

இந்த விரிவான சங்கல்பம் நம்மைப் பல்வகையிலும் பண்புவித்து உயர்விக்கிறது.

1) ஆறடி மனிதன் மிகமிகச் சிறிய உயிரே என்பதை நினைவூட்டி அடக்கத்தினை வளர்க்கிறது. 2) நம் வாழ்காலம் மிகமிகக் குறுகியது என்பதை உணர்த்துகிறது. 3) கடவுளை எவ்வகையிலும் பணியலாம் என்பதைக் காட்டுகிறது.

4) அனைவரின் நன்மையிலும் நம்மை ஈடுபடுத்துகிறது. 5) நம்மால் பிறருக்கு நேர்ந்திருக்கக் கூடிய இன்னல்களுக்காக, நம் தவறுகளுக்காக வருந்தும் போக்கை வளர்க்கிறது. 6) கடமை புரியும் நாட்டத்தை வளர்க்கிறது. 7) பல்லோரின் உறவாலும், ஒத்துழைப்பாலும் தான் எக்காரியமும் கூடும் என்பதையும் உணர்த்துகிறது.

இவ்வளவு சிறப்புடைய சங்கல்பத்தை, சூழ்நிலைக் கேற்ப வழிபடுபவரோ அல்லது வழிபாட்டை நடத்தி வைப்பவரோ கூறிடலாம். வழிபாடு நடத்தி வைப்பவர் கூறும் போது தன் ஊர்/பெயர்/நக்ஷத்ரத்துக்கு பதிலாக, யாருக்காக வழிபாடு நடத்தப்படுகிறதோ அவர்களைப் பற்றிய செய்திகளைக் கூறிட வேண்டும்.

மேலும் ஒவ்வொரு முறை வழிபாட்டிலும், சங்கல்பத்தை முழுமையாகக் கூற இயலாவிடினும் சுருக்கமாகவாவது கண்டிப்பாகக் கூறிட வேண்டும்.

## இன்னமொழியில் தான் வழிபட வேண்டுமா?

எம்மொழியிலும் வழிபடலாம். எத்துணை மொழியிலும் வழிபடலாம்.

இரு உயிர்களுக்கிடையிலான உணர்வு மற்றும் அனுபவப் பகிர்வில் (communication) மனித சமுதாயத்தில் மட்டுமே பல–ஒலிக் கோர்வையும், எழுத்து முறையும் கொண்ட மொழிகள் உருவாகியிருக்கின்றன.

இந்த மொழிகள் புறஉலகத் தாக்கத்தினால் மனிதர்க்கு ஏற்படும் உணர்வுகளின் வெளிப்பாடுகள் (expression of responses) மட்டுமல்ல. நம்முடைய அனுபவங்களின்

விவரிப்புக்களாகவும் (description) நம்மிடமிருந்து இடத்தாலும், காலத்தாலும் வெகு தூரத்திலுள்ளவரோடு நம்மை தொடர்புவிக்கும் பதிவிப்புக்களாகவும் (registration) மேலும், புறப்புலன்களால் அறிய இயலாததையும் மனதால் கற்பிக்க உதவும் கருவிகளாகவும் (conceiving tools) இருக்கின்றன.

ஒலி–அதிர்வு நகர்வுகளால் உருவாகிய உலகங்களையும், அவற்றுக்குப் பின்னணியான பரம்பொருளையும் அறிவதில் ஒலிக் கோர்வைகளின் தொகுப்பான மொழிகள் பெரிதும் பயன்பட்டிருப்பதில் வியப்பொன்றுமில்லை.

இயற்கைச் சூழலுக்கு ஏற்ப, வெவ்வேறு மனித இனங்களின் தனித்தன்மை வாய்ந்த உடல்கூறு அமைப்புக்கேற்ப, இன்னும் பல நிலைகளுக்கும் ஏற்ப, தொன்று தொட்டு உருவாகியுள்ள பல்லாயிரம் மொழிகளும், முதற்பார்வைக்கு, முற்றிலும் வேறுபட்டதாகத் தோன்றினாலும், யாவுமே ஒன்றோடொன்று தொடர்பும், உறவும், சார்பும் உடையனவாகவே உள்ளன.

*இதுவே ஆராய்ச்சிகளின்படி உண்மைநிலை என்பதால் ஒரு–மொழிப் பற்றினாலும், பிறமொழி–அறிவு இன்மையாலும், பல்மொழி உறவுமுறை அறியாமையாலும், நம்மிடையே வளர்ந்துவிட்ட அன்னியமொழி வெறுப்புக்களை* அறவே களைதல் வேண்டும்.

முந்தைய மொழியே மேன்மையானது–பிந்தை மொழி பயனற்றது என்றோ, இன்றைய மொழியே எளிமையானது, புரியக்கூடியது–பண்டைய மொழிகள் பல்லோர்க்கும் புரியாது என்றோ, *தாய்மொழியே* ஏற்கப்பட வேண்டும்–*அன்னிய மொழிகள்* புறக்கணிக்கப்பட வேண்டும் என்றோ கருதக்கூடாது.

பலவிதமான அநாவசியப் பாகுபாடுகளையும், பொய்மைச் செய்திகளையும் கற்பித்துக் கொண்டு, முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்றுள்ள பல்மொழிப் பொக்கிஷத்தை நாம் இழந்துவிடக் கூடாது.

மொழி என்பது சிறுசிறு வார்த்தைகளின் கூட்டு என்ற குறுகிய சிந்தனையிலிருந்து விடுபட்டு, எல்லா மொழிகளுமே அபூர்வமான அதிசக்தி வாய்ந்த *ஒலிக்கோர்வைத் தொடர்கள்* (continuing sound streams) என்ற பரந்த மனப்பாங்கை அடைதல் வேண்டும்.

பாடல்களுக்கு வார்த்தைகளே அடித்தளமாக இருந்தாலும், அவ்வார்த்தைகளை வெறுமனே உச்சரிப்பதை விட, ஒரு ராகத்தில் ஒலிக்கோர்வையாக இசைக்கும் போதுதான் கேட்பவர்களின் மனதில் பாடலின் கருத்தும், அக்கருத்துக்கு உயிரோட்டம் அளித்த அனுபவமும் நம்மனதில் பதிவதை யாவரும் அறிவோம். இதனால்தான், பல நேரங்களில், பாடல்களின் வார்த்தைகள் எம்மொழிச் சொற்கள் என்று நமக்குத் தெரியாவிட்டாலும் பாடலின் இசைப்பில் நாம் வயப்படுகிறோம்.

உதாரணமாக, வேதபாராயணத்தின் போதும், திருமுறைகள், திவ்வியப்பிரபந்தங்கள் ஓதப்படும் போதும், கபீர்தாசர் போன்றோரின் கீர்த்தனைகள் பாடப்படும் போதும், கேட்பவர்களுக்கு சமஸ்கிருதமோ, தமிழோ, தெலுங்கோ தெரியாவிட்டாலும் அனைவரும் அவற்றில் ஒன்றிவிடுகிறோம். இனம், மொழி, மதம், நாடு, காலம் என்று எல்லா பாகுபாடுகளையும் கடந்து எல்லோரையும் பரமானந்தத்தில் ஆழ்த்துகின்ற இத்தகு படைப்புகள் எல்லா மொழிகளிலுமே இருக்கின்றன.

எல்லா மொழிகளிலுமுள்ள இறையிலக்கியங்களும் அருளாளர்களின் அனுபூதி விவரிப்புக்களே. ஒவ்வொருவரின் இறையனுபவமும் மாறுபட்டதாயும் தனிச்சிறப்பு வாய்ந்ததாயும் இருக்குமாதலால், அவை யாவற்றையும் அறிந்து அனுபவித்து நாமும் இறைவனோடு ஒன்றிடுவதற்கு, *நம்மால் கடவுளை எத்தனை மொழிகளில் போற்றிட முடியுமோ அத்துணை மொழிகளிலும் வழிபடலாம்; வழிபடுவோமாக.*

---

## இன்னும் பிற கேள்விகள் -பட்டியல்

1. புதுக் கோயில்கள் கட்டுவது அவசியமா?
2. குறிப்பிட்ட நாள், நேரத்தில் வணங்குவது ஏன்?
3. ஒரு தெய்வ உருவை குறிப்பிட்ட இடத்தில் தாபிப்பது ஏன்?
4. ஆகமங்கள் என்றால் என்ன?
5. ஆண்டவனை மறைப்பது போல் கொடிக்கம்பம் போன்றவை அவசியமா?
6. நிவேதனங்களை கோயிலில் தான் சமைக்க வேண்டுமா?
7. ஆலயங்களில் குறிப்பிட்ட முறைப்படி தான் வணங்க வேண்டுமா?
8. திருக்கோயில்களில் பெண்கள் வழிபாடு நடத்தி வைக்கலாமா?
9. கருவறைக்குள் எல்லோரும் செல்லலாமா?
10. தெருவில் ஒருவர் மறைந்தால் திருக்கோயிலை மூடுவதேன்?
11. கருவறைத் திருவுருவை ஏன் புகைப்படம் எடுக்கலாகாது?
12. ஆண்டவனைப் பணிய ஆலயத்திற்கு ஏன் செல்ல வேண்டும்?
13. ஒரு கோயிலில் மட்டும் வணங்கினால் போதாதா?
14. குறிப்பிட்ட குறை தீர குறிப்பிட்ட ஆலயம் ஏன்?
15. விளக்கம் அறிந்த பின்னரே வழிபட வேண்டுமா?
16. சிறு தெய்வம், பெரிய தெய்வம் பாகுபாடு சரியா?

# முக்தீசுவரர் கோயில் சிறப்பு

மதுரை ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுவரர் திருக்கோயிலைச் சார்ந்த
ஸ்ரீ மரகதவல்லி முக்தீசுவரர் ஆலயம்
(தெப்பக்குளம் மேல்கரை – மதுரை – 625 009)

## தனிச்சிறப்புகள்

சிவனாரின் மதுரைத் திருவிளையாடலால் உருவானது.

வருடத்தில் 25 நாட்களுக்கு (செப் 19–30, மார்ச் 11–23) காலையில் சிவலிங்கத்திற்கு சூரியஒளி பூஜை நடக்கிறது.

பஞ்சபூதத்தலமான மதுரையில் வாயுத்தலம்.

நவகோள் வினையும் ஒரு சேர விலக்கும் கோளிலித்தலம்.

வேண்டுவன வழங்கும் ஆபூர்வ வில்வமரமுடையது.

தினந்தோறும் மாலையில் பக்தர்கள் அனைவரும் கூடி தமிழில் அர்ச்சனைத் திருநாமங்கள் கூறி வழிபாடு நடைபெறுவது.

வெள்ளிதோறும் திருவிளக்குபூஜை 850மேல் ஆகிவிட்டது.

நவராத்ரியில் ஒரே நாளில் கோடி நாம பாராயணம் பெறுவது.

தினமும் மாலை 7.00 முதல் 7.30 சிவநாம ஜபம் நடப்பது.

தைப்பூசவிழாவில் மீனாக்ஷிசொக்கர் 2 நாட்கள் தங்குவது.

மேலும் அளப்பரிய அருட்சிறப்பு வாய்ந்த முக்தீசுவரர் ஆலயத்திற்கு ஒரு முறையாகிலும் வந்து இம்மையில் நல்வாழ்வும் மறுமையில் முக்தியும் அடைவோம்.

அவனருள்

## அவனருள் வெளியீடுகள்

1. இறை வழிபாடு–1. 2. இறை வழிபாடு – 2.
3. சிவராத்ரி பிரதோஷ பெருமையும் அபிஷேகப் பயனும்
4. வைணவத் திருத்தலங்கள்
5. சதுரகிரி மகாலிங்கம் வரலாறும் சித்தர் குறிப்பும்
6, 21. ஸ்ரீ முக்தீஸ்வரர் வரலாறு 7. இறை வழிபாடு – 3
8, 16. உருவ வழிபாடும் ஆலயங்களும் 0.40
9, 13, 22. கந்த சஷ்டி கவசங்கள் 1.00 10. சிவபுராணம்
11, 41. ஆலயத்திற்கு என்ன கொண்டு செல்வது? ஏன்? – 1.00
12, 19. விநாயகர் காரியசித்தி மாலை
14. சிவத்தலங்கள் (தேவாரம் கிடைத்தவை) 1.00
15, 32. சிவாலய அர்ச்சனை அஷ்டோத்திரங்கள் 0.75
17. நவக்ரஹ வழிபாடும் தலங்களும் 0.50
18. ஆறுமுகன் அருட்தலங்கள் 1666. 5.00
20, 28, 37. தினசரி திருவிளக்கு வழிபாடு 0.25
23. ஸ்ரீ ஞானாதீஸ்வரர் வரலாறு (இலவசம்)
24. வெற்றிக் கடவுள் விநாயகர் வழிபாடும் தலங்களும் (இலவசம்)
25. விரதங்களும் பண்டிகைகளும் 0.40
26. ஆஞ்சனேயர் வழிபாடு (இலவசம்)
27. தமிழகத்துள்ள ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரர் கோயில்கள் 1.25
29, 43. திருவாதவூர்த் தலவரலாறு (இலவசம்)
30. அன்றாடம் அனைத்து சிவாலய வழிபாடு 1.00
31. மாரியம்மன் அஷ்டோத்திரம் (இலவசம்)
33. காளியம்மன் அஷ்டோத்திரம் (இலவசம்)
34. விஷ்ணு ஆலய அஷ்டோத்ரங்கள் 0.75
35. அன்றாடம் அனைத்து திருமால் ஆலய வழிபாடு 0.75
36. ருத்ராக்ஷ மகிமை 0.25
38. அன்றாட ஆலய வழிபாடும் ஆலய ஆத்திச்சூடியும் 0.75
39. நடராஜர் அஷ்டோத்திர சதநாமாவளி – (இலவசம்)
40. பிரதோஷம் – பெருமையும், வழிபாடும் 1.00
42. திருநீறு (விபூதி) பெருமையும் பயனும் – 0.25

---

அவனருள் பேரா.S.ரமணி, 168, SHS, காலனி, மதுரை–625 009.